





حفاظة الإسلام مدراس

# ஹிபாஜத்துல் இஸ்லாம்

நிச்சயமாக நாம் அ(ந்த இஸ்லாம் மதத்)தைக் காப்பாற்றுவோம் [குர்ஆன்]

ஆசிரியர்:—மௌலவீ A. R. அப்துர்றஹீம் ஸாஹிப் (பாக்கவீ)

| மலர் 2 | ஹிஜ்ரி 1349 ரமலான் மீ<br>1931 ஹூ பிப்ரவரி மீ | இதழ் 2 |
|---|---|---|


## ஸூரத்துல் ஹுமஜா.

நிகரற்ற அருளாளனும் அளவற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் திருநாமத்தால் (நான் இதனை ஓதுகின்றேன்.)

(1) புறம் கூறுபவனும் பழிமொழி பேசுபவனும் அதோகதி அடைவான்.

(2) அவன் தனத்தைச் சேகரித்து அதை எண்ணி எண்ணி வைப்பவன்.

(3) அவன் தன்னுடைய பொருட் செல்வம் தன்னை எக்காலமும் (உலகத்தில்) நீடித்திருக்கச்செய்யு மென்று நினைக்கின்றான்.

(4) ஒருபோதும் (அவன் கருதியவாறு) இல்லை. நிச்சயமாக அவன் நரகத்தில் எறியப்படுவோன்.

(5) (முஹம்மதே) ஹுதமா வென்பது இன்ன தென்று உமக்குத் தெரியுமா ?

(6) அல்லாஹ் (தஆலா) வால் மூட்டப்பெற்ற நெருப்பே அஃது.

(7) அது ஹிருதயங்களின் மீது எழுகின்றது.

(8) நிச்சயமாக அந்த நெருப்பு அவர்கள் மீது மூட்டப்படும்.

(9) நீண்ட தூண்களில்,

*[அதாவது இழித்துரை கூறுபவனும், புறக்கோள் பேசுபவனுமாய ஒவ்வொருவன் மீதும் "வைல்" என்னும் ஓடை அல்லது கடுமையான கெடுதி உண்டாயிருக்கின்றது. அவன் மித மிஞ்சிய சொத்துக்களைச் சேகரித்து அதை நல்ல வழியில் செலவு செய்யாது சேமித்து வைத்துக் கொண்டு, இச்செல்வத்தால்தன் காயம் சித்தியாகும் என்று எண்ணுகின்றான். உண்மை, நினைப்பின்படி இல்லை. ஏனெனின் உலகம் ஏற்பட்டகால முதல் எவ்வளவோ பணக்காரர்கள் இருந்திருக்கின்றனர். ஆனால் அவர்கள் தங்களிடமுள்ள அளவற்ற ஐசுவரியங்களைக் கொண்டு தங்களுக்கு ஏற்படும் மரணத்தைத்தவிர்த்துக்கொண்டார்களா ? ஆதலால் அவன் தனது கெட்ட நடத்தைக்காகவும், ஐசுவரியத்தைச் சம்பாதித்து நல்ல பாதையில் செலவிடாது திரட்டி வைத்து அதைக் கொண்டு சாகாமல் ஜீவித்திருக்கலாம் என்று கருதினமைக்காகவும் திரேகத்தை ஒடித்துத்துண்டந் துண்டமாகச் செய்யும் படியான நெருப்பில் எறியப்படு*

வான். அந்நெருப்பு இவ்வுலகத்திலுண்டான நெருப்பைப் போன்றதன்று. அஃது அல்லாஹ் தஆலாவின் கோபப் பார்வையால் உண்டாகிறதாகயிருக்கும். நீண்டதூண்களில் கை, கால், உடல் அசையாமல், நெளிக்க முடியாதவூறு அம்மனிதனை இறுகப் பிணித்து அவனது ஹிருதயத்தில் அந்நெருப்பைக் கொண்டு மூட்டப்படும் என்பதே.]

இத்திரு அத்தியாயம் மக்கீயாம் - இதற்கு "ஸூரத்துல் ஹூமஜா" அலருரைப்போன் அத்தியாயம் எனப் பெயரிடப் பெற்றது இதில் எவனொருவன் மற்றவனது மானத்தைப்போக்கி அவனுக்குக் குறை தேடித்திரி கின்ருனே அன்னவன் கொடிய வேதனை அடைதற்குப் பாத்திரனவன் என்பதும், எவன் அல்லாஹ் தஆலாவிடத்திலும் அவனது ரசூலிடத்திலும் மரியாதைக் குறைவாக நடந்து குர்ஆன் ஷரீபை, பொய்யாக்கி வைத்து, நாயனது கட்டளையினின்றும் முகத்தைத் திருப்பிக் கொள்ளுகின்ருனே அன்னவன் அடையும் கதி இன்னதென குறிப்பிட்டிருப்பதுமேயாம்.

இவ்வத்தியாயம் இறக்கப்பெற்ற காரணமாவது :— மக்கமா நகரிலுள்ள (குப்பார்) ஆண்டவனது கட்டளைக்கு மாறு செய்தவர்களிலுள்ள "ஆஸ்பின் வாயிலஸஹ்மீ" "வலீதுப்னுமுகைரா மக்ஸூமீ" "அக்னஸிப்னு ஷரீகதகபீ" இம்மூவர்களும் நாயகம் (ஸல்.) அவர்களையும் மற்றும் முஸ்லிம்களையும் ஒவ்வொரு கூட்டத்திலும் குத்துப்பாடு சொல்லிக் கொண்டும் கெட்டவர்களென்று இழிவு படுத்திப் பேசிக் கொண்டும் இருந்தார்கள். அதிலும் அவர்களில் குறிப்பாக "அக்னஸிப்னு ஷரீக்" என்பான் நாயகம்(ஸல்.) அவர்கள் முன்பாகவே தகாத வார்த்தை யாடி வீண் வாதங்கள் புரிந்து கொண்டிருந்தான். இதை முன்னிட்டு அன்னவர்கள் விஷயமாக இவ்வத்தியாயம் இறக்கப்பட்டது. இதனுல் நாயகம் (ஸல்.) அவர்களையும், மற்றும் முஸ்லிம்களையும் அவமதித்து பின்னங்கள் பேசித் தூற்றித்திரியும் வர்க்கத்தினர்கட்கு எத்தகைய வேதனையைக் கொண்டு அச்சுறுத்தப் பட்டிருக்கின்றதென்பது காண்க.

இஃது ஒரு வர்க்கத்தினரைக் குறிப்பிட்ட போதிலும், பொதுவாக இத்தீய நடத்தைகளை உடைய எல்லா மக்கட்கும் எல்லா வர்க்கத்தினர்க்கும் இத்தண்டனை உண்டாகுமென்றறிக.

முதலாவது வசனத்தில் ஹூமஜத், லுமஜத் என்னும் இருபதங்களும் உள. அவ்விரு பதங்களுக்கும் நேர்முகமாய் இழித்துரை பேசுதலும் புறம்பேசுதலுமாய வெவ்வேறு பொருள்படினும் முடிவாக அவ்விரண்டு வார்த்தைகளின் கருத்துக்களும் ஒரேவிதமாக யிருப்பதாகவே அபிப்பிராயப் படுகின்றனர். ஏனெனில் ஒரு மனிதனை இழித்துச் சொல்ல நினைக்கின்றவன் அவனைப் புறங் கூறித் திரிவது வழக்கமாகவே யிருக்கின்றது. எனவே இவ்விரு பதங்களையும் பொருளை வலியுறுத்திக் கூறுவதற்கு அருளப்பெற்றிருப்பதாகக் காணலாம்.

இதன் ஐந்தாம் வசனத்தில் "மல்ஹூதமா" என்னும் ஆச்சரியத்தின் பேரில் அறிவிக்கக்கூடிய பதத்தை உபயோகித்து வினவப்பட்டிருப்பதின் கருத்தாவது, இந்த நெருப்பானது புத்திசாலிகளின் புத்திக்கு எட்டாததும், ஹகீம்களின் அறிவிற்குப் புலப்படாததாயு மிருக்கின்றது என்பதை அறிவிக்கின்றது. ஏனெனின் இவ்வுலகத்தின்கண் வழங்கிவரும் உஷ்ணம், சூடு இவைகளெல்லாம் மூன்றுவிதமான தாகவே காணப்படுகின்றன. (1) நெருப்பின் தற்சுபாவமான சூடு (2) சூரியனுல் ஏற்படும் வெய்யிற் சூடு (3) ஜூரம் முதலியவை ஏற்படுவதால் உண்டாகும் உடற்சூடு, ஆனுல் இதில் கூறப் பட்டிருக்கும் நெருப்போ இவைபோன்றதன்று; அடியார்கள் செய்யும் பாவங்களைக் கொண்டு ஆண்டவனது கோபத்தால் (கல்பு) இருதயங்கள் மீது மூட்டப்படுகின்ற கொடிய நெருப்பாகயிருக்கும்; உலகத்தில் நமது பார்வைக்குப் புலப்படும் நெருப்பானது தேகத்தில் பட்டவுடன் மேல்பாகம் கரிந்து சன்னஞ் சன்னமாக உட்பாகத்தையும் வேக வைத்து முக்கிய உறுப்புக்களையும் தாக்கி பிறகு உயிருக்கு ஆபத்து நேரிடுமாறு செய்து விடுகின்றது. ஆண்டவனது கோபப் பார்வையால் உண்டாகும் நெருப்போ வெனின், ஆரம்பமாக ஐயறிவிற்கு ஏற்பட்டு அதிலிருந்து (கல்பு) இருதயத்திற்கு வந்து சற்று நேரத்திற்கெல்லாம் தட்டழிந்து விடும் படி நேரிடுகின்றது. ஆதலால் இவ்விருவகை நெருப்பிற்கும் வித்தியாசம் ஏற்பட்டிருப்பது வெள்ளிடை மலையாம்.



தவிர (கல்பு) ஹிருதயத்தைக் குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதானது தேகத்திலுண்டாயிருக்கும் உருப்புக்களெல்லாவற்றினும் அது மிக நுட்பமுடையதாகவும், மற்ற உறுப்புக்களைவிட அதிககஷ்டத்தை சகிப்பதற்கு சக்தியற்றதாகவு மிருப்பதுவேயாம். அல்லது கெட்ட (அகீதா) நிர்ணயம் அல்லது எண்ணம் உண்டாகும் ஸ்தலமாக யிருப்பதும், கெடுதியான அமல்கள் முளைப்பதன் ஸ்தானமாக இருப்பதுமேயாம். வெளியிலுள்ள குளிர்காற்று உட்செல்லாமலும், உள்ளுறைந்திருக்கும் உஷ்ணம் வெளியில் வராமலும் இந்த நெருப்பு அவர்கள் தேகத்தில் அடைத்து வைக்கப்பட்டிருக்கின்றது. சில சமயங்களிற் கைகால்களை ஆட்டி அசைப்பது, தேகத்தை பூமி அல்லது சுவற்றில் மோதுவது கொண்டு தேகத்திலுள்ள சிறிய துவாரங்கள் வழியாக அங்கிருக்கும் உஷ்ணம் கொஞ்சங் கொஞ்சமாக வெளியாகி வேதனை சிறிது தணிதல் கூடுமாதலால், நீண்ட ஸ்தம்பங்களில் கை கால் அசையாவாறு இறுகப் பிணித்து இவ்வேதனை அளிக்கப் படுமென தெளிவாய்க் கூறப்பட்டிருப்பது எளிதிற் புலனும் (அல்லாஹ் அஃலம்.)

---

# நாயக வாக்கியம்.

நாவைப் பேணிக் காப்பாற்றுங்கள்.

இப்பூவுலகின்கண் எக்காலத்தில் மானிட உற்பத்தி ஏற்பட்டதோ அக்கால முதல் மானிட வர்க்கத்தினர்பேரில் பலவிதமான இடுக்கண்கள் ஏற்பட்டுக் கொண்டே யிருக்கின்றன. ஆனுல் குறிப்பிட்ட ஒரு காலத்திறதுப்பின் அவை நீங்கியும் போகின்றன.

உதாரணமாக ஒரு மனிதன் மற்றொருவனை வாளாயுதத்தால் குத்தியோ, தலையில் தடியாலடித்தோ காயப்படுத்தி விடுகிருனயின், அடிபட்ட அம்மனிதனுக்கு கொடிய துன்பம் உண்டாம் என்பதில ஐயமின்று. அக்கஷ்டத்திற்குப் பரிகாரஞ் செய்வதனுல் அநேகமாக அக்காயம் ஆறி விடுவதைக் கொண்டு கஷ்டமும் ஒருவாறு நீங்கிவிடுகின்றது. ஆனுல் நாவினுல் சுட்ட புண் (நாவால் ஒரு மனிதனைப் பேசிவிடுவது) அத்தன்மை உடையதன்று. அக்காயம் ஆயுள்கால பரியந்தம் இன்னவனின் மனதைத் துளைத்துக் கொண்டே யிருக்கின்றது. எவ்விதமான பரிகாரஞ் செய்வதைக் கொண்டும் அது நிவர்த்தியாவதில்லை. உண்மையைக் கூறுமிடத்து அதற்கு எவ்வித பரிகாரமும் பிரயோசனம் தரத்தக்க தல்லவென்றே கூற வேண்டியதா யிருக்கிறது. இதற்கு

"ஈட்டியால் குத்தப்பட்ட காயமானது (பரிகாரஞ் செய்வது கொண்டு)
ஆறும் ஆனுல் நாவாகிறது எவனைக்
காயப் படுத்தி விட்டதோ அக்காயம்
எவ்விதப் பரிகாரத்தைக் கொண்டும்
ஆருது"

என்னும் புலவரின் அமிர்தமொழி பொருந்தும்.

இதே நாவைக் கொண்டுதான் ஒருவன் செருப்படியும்படுகின்ருன். மற்றவன் அருமை பெருமையோடு உயர்ந்த சிம்மாசனத்தில் இலங்குகின்ருன். இக்காரணத்தினுல் தான் நாயகம் (ஸல்.) அவர்கள் நாவுக்கு அளவற்ற விசேடத்தை அளித்து பேணுதலாக வைத்திருக்கும்படி கட்டளையிட்டுச் சென்றிருக்கிருர்கள்.

அஃதாவது :—நபிகள் திலகம் ரசூல் (ஸல்.) அவர்கள் ஹஜ்ரத் முஆத் (ரலி.) அவர்களை நோக்கி 'நான் (தீன்) மார்க்கத்தின் (அசல்) அடிவேரையும், மார்க்கமென்னும் கட்டடத்தின் தூண்களையும், இன்னும் மார்க்கமென்னும் மலைகளின் சிகரங்களையும் உங்களுக்கறிவிக்க வேண்டாமா? வென வினவியதற்கு ஹஜ்ரத் முஆத் (ரலி) அவர்கள் நாயகம (ஸல்.) அவர்களை நோக்கி 'எங்கள் மீது தயைகூர்ந்து அவ்விஷயம் இன்னதென அறிவியுங்க'ளென்று விடை பகரவே, "தீனின் அடிப்படை இஸ்லாமாயிருக்கும்; தீனின் தூண் தொழுகையாகும்; தீனென்னும் பருவதங்களின் சிகரங்கள் ஆண்டவனது பாதையில் (ஜிஹாத்) யுத்தம் புரிவதாகும்;

இவையேயன்றி, இவை எல்லாவற்றிற்கும் ஆணிவேர் போன்ற ஒருவஸ்து உண்டு; அதையும் உங்களுக்கறிவிக்கின்றே" னென நாயகம் (ஸல்.) அவர்கள் தங்கள் கையால் நாவைப் பிடித்துக் காண்பித்து "இதைக் காப்பாற்றி வையுங்க"ளென்று சொன்னார்கள். உடனே "நாங்கள் ஏதாகிலும் பேசுவதைக் கொண்டும் பிடிக்கப்படுவோமோ" என ஹஜ்ரத் முஆத் (ரலி.) அவர்கள் கேட்டதற்கு "மனிதர்கள் தங்களின் நாவின் காரணமாக முகங்குப்புற நரகத்தில் வீழ்த்தப்படுவார்களென்பது உங்களுக்குத் தெரியாதோ" என்று விடை பகர்ந்தார்கள்.

நாவாகிறது மனிதனை (ஹலாக்) நாசமாக்கி அபாயத்திலாக்கி வைக்கும் ஒரு வஸ்துவாகயிருக்குமென்று தங்கள் நாவை வெளியிலிழுத்து எறிந்துவிட ஹஜ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி.) அவர்கள் முயற்சித்ததாகச் சொல்லப்படுகிறது. தவிர எம்மனிதன் தன் நாவைக் கொண்டு பிறரைத் தூற்றாமலும், நோவினைக் கொடாமலும் சதா நாவின்பேரில் கவனஞ் செலுத்திக்கொண்டும் பற்கள் மர்மஸ்தானம் இவைகளைப் பேணிக் கொள்வதின் பொறுப்பேற்றுக் கொள்கின்றானோ அம்மனிதனுக்காக சுவர்க்கத்தின் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொள்வதாக நாயகம் (ஸல்.) அவர்கள் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றார்கள்.

உடற்கூறுஇலக்கணத்தையொட்டி நோக்குமிடத்து நாவென்பது ஓர் இறைச்சித் துண்டாகவே காணப்படுகின்றது. ஆனால் சகல உறுப்புக்களும் அதைப் பார்த்து நடுக்குறுகின்றன என்றால் அதன் மகத்துவத்தை யாதென்று சொல்லுவது! ஒவ்வொருநாளும் சகல உறுப்புக்களும் எளிமைத்தனத்தோடும் அடிபணிந்தும் நேரான பாதையில் செல்லும்படி நாவை வேண்டிக் கேட்டுக் கொள்ளுகின்றன. இதற்கு மேற்கோளாக நாயகம் (ஸல்.) அவர்களின் திருமொழிகளிலொன்றை கீழே குறிப்பிடுவோம்: அஃதாவது பொழுது புலருமுன் மானிடனின் சகல உருப்புக்களும் நாவின் முன்னிலையில் தாழ்மையோடு 'ஏ நாவே! நாங்கள் உன்னோடு வாழ்கின்றோம்; நீ நேர்மையாக வாழ்ந்தால் நாங்களும் அவ்வாறே வாழ்வோம். நீ நேர்மை நீங்கி விடுவாயேல் நாங்களும் அவ்வாறே; ஆதலால் எங்களை முன்னிட்டு ஆண்டவனை பயப்பட்டு நேரான பாதையில் செல்லு" என்று கூறும் என நாயகம் (ஸல்.) அவர்கள் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றார்கள். நாவின் "உண்டு" அல்லது "இல்லை" என்னும் ஒரு சொல்லைக் கொண்டே ஆயிரக்கணக்கான உயிர்கள் தப்பியும், ஆயிரந் தலைகள் அறுபட்டும் போகின்றன. யோக்கியன் உண்மைசாலி என்னும் புகழுக்குரிய நற்பெயர்களும் போக்கிரி பொய்யன் வாயாடி நோவினைக் கொடுப்பவன் என்னும் பொல்லாப் பெயர்களும் நாவின் காரணமாகவே ஏற்படுகின்றனவாம்.

பொன்னே போன்று போற்றற்குரிய மேலே கூறப்பட்ட நாயகம் (ஸல்.) அவர்களின் அமிர்தமொழிகள் நாவைப்பேணி செவ்வையாய் நடக்கவேண்டுமென்று எவ்வாறு வற்புறுத்திக் கூறுகின்றது பாருங்கள். மனிதன் மேம்படுவதும் தாழ்வு அடைதலும் நாவைப் பொருத்திருக்கின்றதென்று விளக்கிக் காட்டுதல் காண்க.

ஏகபராபரவள்ளள் நாயகா!

பேசுவதற்கு எங்களுக்கு சுதந்திரம் அளிப்பாயாகில் உண்மையினையையே பேசுவதற்கு நாவின்பேரில் எங்களுக்கு அதிகாரத்தைக் கொடு; நாங்கள் இவ்வுலகின்கண் வாழும் வரை உண்மையினையே பேசும்படியும் பிறகு உன் சன்னிதானத்திற்கு உண்மையாளராக வந்து சேரும்படியும் கிருபை பாலிப்பாயாக.

ஆதலால் எல்லாம்வல்ல நாயன் நம் அனை[வ]ரின் நாவைக் காப்பாற்றி உண்மை பேசும் கூட்டத்தில் நம்மனைவரையும் வாழவைப்பானாகவும்.




## நம் அருமை மௌலானா



அந்தோ! அந்தோ!! நமது அருமை மௌலானா முஹம்மத்அலீ வேற்று நாட்டில் தம் இன்னுயிர் துறந்தார்கள் என்று கேட்டு நாம் நெஞ்சழிந்தோம் (இன்னா லில்லாஹி வ இன்னா இலைஹி ராஜிஊன்) பொன்னினும் பொலிவுடைய அவர்களது தோற்றத்தை இனி என்று காண்போம். மின்னினும் வலியுடைய அவர்களது வீரமொழிகளை இனி என்று கேட்போம். தன்னலமின்றி தன் உயிரை நம் சமூக உரிமைக்கும் தேச உரிமைக்கும் சமர்ப்பித்த இத்தகைய ஒரு பெரிய தியாகவீரரை இனி இவ்விந்தியா காண்டற்கியலுமோ?

"விடுதலை பெற்ற இந்தியாவிற்கே மீண்டு செல்வேன்; இன்றேல் என்னை இங்கிலாந்திலேயே விட்டுவிடுவேன்"

என்று கூறிய வீரமொழி முக்காலும் மெய்த்தது. வட்டமேசை மகாநாட்டில் இந்தியா உரிமையைப் பெறவில்லை. மௌலானா முஹம்மது அலீயும் அடிமை இந்தியாவிற்குத் திரும்பினாரல்லர். இந்தியாவிற்கு ஆங்கிலேயர் நலன் புரிவர் என்னும் எண்ணத்தோடு நாம் மௌலானா அவர்களை ஒரு தலைவராக இங்கிலாந்திற்கு அனுப்பினோம்; ஆங்கிலேயர் நமக்கு நமது தலைவரது ஜனாஸாவை அனுப்பினார்கள். இத்துக்கச் செய்தியை எவர்க்குரைப்போம்? என் செய்வோம்?

மௌலானா அவர்கள் வாழ்க்கை முற்றிலும் ஓயாத உழைப்பாய் முடிந்தது. 1902-ல் பரோடா சிவில் உத்தியோகஸ்தராய் அமர்ந்த அன்று முதல் இப்பெரியார் உயிர் துறக்கும் வரை ஒரு நாளேனும் ஒரு பொழுதேனும் ஓய்வு பெற்றிருப்பரோ என்று ஐயுறுகின்றோம். மௌலானா அவர்கள் பரோடாவில் உத்தியோகத்திற் சிறிது காலமே அமர்ந்திருந்தார்கள். பின்னர் 'காம்ரேட்' என்னும் பத்திரிகையைக் கல்கத்தாவில் ஸ்தாபித்தார்கள் பத்திரிகைத் தொழிலிற் பயிற்சி இன்றியே அரிய ஆற்றலோடு இப்பத்திரிகையை அவர்கள் மிகவும் செல்வாக்குடைய ஓர் முதற்றரப் பத்திரிகையாய்ச் செய்தமைக்கு அக்காலத்திய பத்திரிகாசிரியர்கள் பலரும் க்ண்டு இவர்களது திறமையைப் பெரிதும் மெச்சி வியந்தனர். எத்தொழிலைச் செய்யினும் அவ்வத்தொழிலில் இடைவிடாது உழைத்தல், தன் முழு ஆற்றலையும் அறிவையும் அதற்கீடுபடுத்தல், என்பன இவர்களது வழக்கமாய் இருந்தமையால், இவர்களது முயற்சிகள் யாவும் தலைமைக்கு வந்தனவே யன்றி முளையிலேயே நசித்தனவன்று. முஸ்லிம் சமூகத்திற்கு இற்றைக்கு உள்ள ஒரு ஒற்றுமையும், உணர்ச்சியும் பிறவும் நம் மௌலானா அவர்களால் அன்றி ஏற்பட்டிருக்குமோ என்று ஐயுறவேண்டியவர்களாய் இருக்கின்றோம். முதிர்ந்த மத சமூக உணர்ச்சியால் வைரம் பாய்ந்த இவர்களது உள்ளம் இஸ்லாமிய இளவல்களின் மனத்தை ஈர்த்து நின்றது. நமது இளவல்கட்கு இவர்கள் ஓர் பண்டைக்கால மஹான் போன்றே விளங்கினார்கள். மௌலானா யாது மொழிந்தார்கள், அவர்களது கட்டளை யாது, அவர்கள் நோக்கம் எத்தகையது என்பதே அலிகார் கல்லூரி மாணவர்களின் அன்றாடப் பேச்சாய் இருந்துவந்தது. முஸ்லிம் இளவல்

ஆண்டவனுக்கு இணை வைப்பதும், தாய் தகப்பனுக்குக் கீழ்ப்படியா[ம]லிருத்தலும், உயிர்களைக் கொல்வதும், பொய் சத்தியம் செய்வதும் பெரு[ம்] பாவங்களாகும்.

களின் நெஞ்சத்தில் குடிகொண்டிருந்த மௌலானா அவர்கள் இறுதியில் ஓயாக் கவலையாலும் உழைப்பாலும் உடற்கட்டிழந்து, நோயால் நலிந்து, நோயுடன் ஆங்கிலநாடு சென்று ஆங்கே உயிர் துறந்தமையை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் துக்கக் கண்ணீர் உகுக்கா நெஞ்சம் வன்னெஞ்சாம்.

கான்பூர் மஸ்ஜிதின் ஒரு பகுதியினை அம் முனிசிபாலிடியார் அரசாங்க ஆதரவோடு போலீஸ்ப் படை துணை கொண்டு இடித்துத் தரை மட்டமாக்கிய போழ்து, இவ்விந்திய முஸ்லிம்களின் மனம் கொதித்தது; மஸ்ஜிதை எக்காரணம்பற்றியும் இடிப்பதென்பது மார்க்கத்திற்கு உடன்பாடாகுமோ? பெரும் படை தாங்கிய அரசாங்கத்தின் இக் கூடாச் செயலைக் கண்டு நமது மக்கள் வருந்தினார்கள்; என் செய்வது என்று ஏங்கினார்கள். முஸ்லிம் சிறுவர்கள் மீண்டும் மஸ்ஜிதைக் கட்டுவதற்கு அறிகுறியாகக் கற்களை இடிபட்ட மஸ்ஜிதிற் கருகாமையில் குவித்தனர். நமது அருமை அரசாங்கத்தார் இராணுவப் படை கொண்டு சுட்டனர்; துப்பாக்கி முனையால்தாக்கினர்; பலர் உயிர் துறந்தனர். இச் செயலைக் கண்டு மனஞ் சகியாராய் நமது மௌலானாச் சிங்கம் கர்ஜித்தது. லண்டன் நகரம் வரையிற் போந்து பெரும் கிளர்ச்சி புரிந்து தாம் செய்த செயலை மாற்ற மனமில்லாது இருந்த இந்திய அரசாங்கத்தின் பிடிவாதத்தைச் சாய்த்து மீண்டும் அம் மஸ்ஜிதை மௌலானா அவர்கள் முன்னிலும் பன்மடங்கு அழகாக—பெருமையாக—கெம்பீரமாகப் புதிப்பித்தமை இந்திய முஸ்லிம் வீரர்களின் வாழ்க்கைச் சரிதையில் ஓர் பொன்னணியாகும். மீண்டும் கிலாபத் உரிமையை வல்லரசுகள் மடிக்க சதிசெய்த ஞான்று, கிலாபத்திற்காகப் போராடிச் சிறை சென்றார்கள். திலகர் நிதியெனக் காங்கிரஸ் ஒரு கோடி ரூபாய் திரட்ட முன்வந்தபோழ்து மௌலானா அவர்களும் ஒத்துழைத்து நின்றதனாலன்றோ காங்கிரஸார் இத்தொகையை வெகு எளிதில் திரட்டினார்கள். மௌலானா அவர்கள் தேசத்திற் காகவும், சமுகத்திற் காகவும், ஏழைகட் காகவும், உரிமைப் போராட்டம் புரிந்த செயல்கள் ஒன்றோ? இரண்டோ? அம்மம்ம! எண்ணிற் கடங்காவே!

இறுதியில் நம் மார்க்கத்திற்கு முரண்பாடாகக் கொண்டுவரப்பெற்ற சாரதா சட்டத்தை வெறுமையாக்கியவர்களும் நமது மௌலானா அவர்கள் என்றே கூறவேண்டும். அதற்காக அரசப் பிரதிநிதியின்பாற் சென்று பிரிட்டிஷார் தமது வாக்குறுதியை இழந்து சட்டங்கள் வாயிலாக மதக் கோட்பாடுகளில் தலையிடுதலைப் பற்றி ஆங்கு எடுத்துரைத்து அதன் பயனாய் இன்று அச்சட்டம் ஏட்டுச் சட்டமாகவே முடிந்து விட்டமை காண்க. இறுதியில் கண்ணோபாற் படுக்கை எய்தினார்கள். பினனர்இருதய நோயால பீடிக்கப் பெற்ற நிலைமையிற்றானே வட்டமேசை மகாநாட்டிற்கு நமது சமூகத்தின் ஓர் தலைமைப் பிரதிநிதியாய்ச் சென்றார்கள். வட்டமேசை மகா நாட்டிற்கு இவர்கள் சென்றிராரகளேல் ஆங்கு பெரும்பாலும் மகா சபையார் கூற்றும் வெள்ளையர்கள் கூற்றும் மேம்படும் என்றஞ்சியும், நம் சமூகம் தாயில்லாக் குழவியின் கதியை அடையும் என்று கருதியும் மௌலானா அவர்கள் தம் உயிரை ஒரு பொருட்டாக நினைத்தார்களல்லர்; லண்டன் சென்றதும் சமூகப் பற்றே முற்றிலும் கொண்ட மௌலானாவை வெள்ளையர்கள் காணாமல் சமூகப்பற்றோடு அணுத்துணையும் வேற்றுமை பெறாத தேசியப் பற்றினும் முதிர்ந்த ஒரு வீரரைக் கண்டு வித விதுர்த்தனர். வட்டமேசை மகாநாட்டில் இவர்கள் செய்த வீர கர்ச்சனையின் முழக்கம் இன்றும் நம் செவியில் துளைத்துக்கொண்டிருக்கின்றது! நம் சமூகத்திற்காக போராடிய கிலாபத்போராட்டம் இன்றும் நம் கண்முன் நிற்கின்றது! தேசத்திற்காக இவர்கள் செய்த செயல்கள் எல்லாம் நம் நெஞ்சத்தில் நிலைபெற்றிருக்கின்றன! ஆனால் நமது மௌலானா அவர்களின் பெருமை தங்கிய தோற்றமும், வதனப் பிரகாசமும், கோடையிடியை ஒத்த பிரசங்க ஓசையும், ஒளியின்மிக்கக்கண்களும், பீரங்கிக்கும் அசையுமோ என்று கருதக் கூடிய உடற்கட்டும் அந்தோ! அந்தோ! எங்குற்றதோ?

எல்லாம் இறைவனின் திருவருளால் நடைபெறுவதால் நாம் இந் நிகழ்ச்சிக்குத் தலைசாய்க்க வேண்டியவர்களாய் இருக்கின்றோம். மௌலானா அவர்களின் நினைவு நீடூழி வாழி! அவர்களுக்கு இறைவனின் திருக்கருணை உண்டாகுமாறு நாம் அனைவரும் இறைஞ்சுவோமாக.

---



# மதமும் விஞ்ஞானமும்

"நூர்"

மதம் என்பது ஓர் ஏமாற்றம் என்றும், மதத் தலைவர்கள் ஏமாற்றுக்காரர்களாயினும் அறிவு மயக்கம் கொண்டவர்களாயினும் இருத்தல்கூடும் என்றும், எனவே மதமும் மதஞ் சார்ந்த கலைகளும், மதத்தைப் போதிக்க எழுந்த தலைவர்களும், அவர்களின் சார்பினரும் இவ்வுலகத்திற்கு வேண்டுவதில்லை என்றும் தற்கால விஞ்ஞானக் கலையில் சிறிது தேர்ச்சி உடையார் கூறுகின்றனர். இத்தகையினர் தமது விஞ்ஞானத் திறன் கொண்டு சிற்சில உலக சாதனக் கருவிகளைக் கண்டுபிடித்து வழங்கி வருகின்றமையால், இவர்கள் கூற்றை எளிய மக்கள் நம்பவும் நேர்கின்றது. விஞ்ஞானிகள் கூற்றுக்கிணங்க, மதத்தில் ஒரு சிறிது சம்பந்தமுடையாரும் மதக் கட்டளைகள், தத்துவங்கள், போதனைகள் இவைகளை திரித்தும் விரித்தும் கூட்டியும் குறுக்கியும் பொருள் கூற முன் வந்தனர். எனவே, இஸ்லாத்தின் தத்துவங்களின் முன் இவ் விஞ்ஞானத் தத்துவங்கள் எவ்வாறுகின்றன என்று ஆராய்ச்சி செய்தல் நமது கடனாகின்றது.

இகபர மிரண்டினுக்கும் எதனால் சுகம் உண்டாமோ அதனையே மக்கள் விரும்ப வேண்டும் என்பதும், அதன்வழியே மக்கள் செல்லவேண்டும் என்பதும் விஞ்ஞானிகளும் ஒப்புக்கொள்ளற் குரியனவாம். விஞ்ஞானிகள் இகத்தை நம்புகின்றார்கள் பரத்தை நம்புவதில்லை. ஏன்? பரம் தங்கள் கண்கட்கும் தங்கள் பூதக் கண்ணாடிகட்கும் தோன்றவில்லையாதலால். ஒரு கடிதத்தின் ஒரு புறத்தையே உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கும் ஒருவன் அக்கடிதத்தின் மறுபுறத்தின் உண்மையினையும், அம்மறுபுறத்தில் உள்ள எழுத்துக்களின் தன்மையினையும் காணமாட்டான். தான் ஒரு புறத்தையே கூருகநோக்கும் காரணம்பற்றி மறுபுறத்தை காணமலாய்விடுகிறதென்று கருதாமல் இக்கடிதத்திற்கு மறுபுறம் இல்லையென்றே வாய்கூசாது கூறுகின்றான்! தான் பார்க்கும் ஒருபுறத்தின் தன்மையை நன்கு கவனித்தமையின் பயனாக அதில் தேர்ச்சி பெற்று இவன் மறுபுறத்தை மறுக்கத் தனக்கு அதிகாரமும் பொறுப்பும் ஏற்பட்டுவிட்டதென்று அகங்கரிக்கின்றான். இவனைப்போன்றே விஞ்ஞானிகள் தாங்கள் நீராவி இயந்திரத்தையோ, ஆகாய விமானத்தையோ, ஓசைக் கருவியினையோ, மின்சார விளக்கினையோ, கண்டுபிடித்துவிட்ட காரணம்பற்றி, தங்கள் அறிவு பூரணத்துவம் பெற்றுவிட்டதாகக் கருதி மதத்திலும், மதக் கட்டளைகளிலும் தலையிட்டுத் தடுமாற்றமான மொழிகளைப் பிதற்றத் துவங்குகின்றனர். உதாரணமாக மின்சார விளக்கின் கர்த்தாவான ஈன்ஸ்டீன் என்பவரை மக்கள் கண்ட

தும் "கடவுளைப்பற்றிய அபிப்பிராயம் தங்கட்கு யாது?" என்றும் இன்னும் இது போன்ற இதுபற்றிய பல கேள்விகளைக் கேட்கின்றனர். ஈன்ஸ்டீன் என்பவர் "நான் மின்சார விளக்கின் நுட்பத்தையும் அதன் தன்மையினையும் அதன் பயனையும் உணருமாறு என் அறிவைச் செலுத்தி என் அறிவு மின்சார அறிவாய்விட்டது இறைவனைப் பற்றியோ இறைவனின் கட்டளைகளைப்பற்றியோ பெரியாரின் அமுத மொழிகளின் உண்மையைப்பற்றியோ நான் ஒரு போழ்தும் சிந்தித்தோ, கேட்டோ, படித்தோ, தெளிந்தேனல்லேன்" என்று உண்மையைக் கூறுராய் மின்சாரத்தில் செலுத்தி ஒய்ந்து போன மூளையை ஒரு இமைப்போழ்து தன்னைப்பற்றிச் சிந்தித்து, அதிற்கிடைத்த மயக்கச் சரக்கை உண்மைப் பொருள் போல வியாபாரம் செய்து விடுகின்றார். இதனால் விஞ்ஞானிகளால் உலகத்திற்கு அறவே பயனில்லை என்று நாம் கூற முன்வரவில்லை. ஒரு அளவில் விஞ்ஞானிகளால் இகத்தைப் பொறுத்த மட்டிற் பயனுண்டு. ஆயின் இவர்கள் பரத்தைப் பொறுத்தவரையில் சின்னஞ் சிறு குழந்தைகளினும் தாழ்ந்தோராவர். சின்னஞ் சிறு குழந்தைகட்கு மத உணர்ச்சியை ஊட்டுவதற்கு அவற்றின் மனம் களங்கமற்றிருக்கின்றது. விஞ்ஞானிகளின் மனம் தாங்கள் கண்டு பிடித்த சிலவற்றால் தடித்து மத உணர்ச்சி என்னும் வித்து முளைப்பதற்கு வளமில்லாக்களர் நிலம் போன்றிருக்கின்றது.

இறைவன் படைப்பே ஒரு ஆச்சரியமன்றோ? இப்படைப்பினும் வியக்கத்தக்கது, பெருமை உடையது, உயர்ந்தது யாண்டுளது? உலகத்தில் தன்னினும் ஒப்பற்ற, தன்னினும் உயர்வற்ற, விஞ்ஞானி இறைவனேயன்றி, தற்கால விஞ்ஞானிகள் அஞ்ஞானிகளே யாவர். ஆகாய விமானத்தில் பறந்து சென்றமையால் மனிதனுக்குத் துக்கம் நீங்கிச் சுகம் உதிக்குமோ? மின்சார விளக்கையும், சக்தியையும் உபயோகித்துவரும் தற்கால மக்கள் நமது நாயகம் (ஸல்.)அவர்கட்கு இறைவனால் கிடைத்த அருளின் இன்பப் பெருக்கின் தன்மையை ஒரு எட்டுணையென்பதை அறிவரோ?

நிற்க, விஞ்ஞானிகள் இகத்தில் உள்ள சில உண்மைகளைப்பற்றி, அதிலும் முற்றுப் பெறாது ஒரு அளவில் அறிந்திருக்கின்றனர்; இதுபற்றியே தங்கள் அறிவைச் செலுத்துகின்றனர். எந்த ஒரு விஷயத்தில் தமது காலத்தையும் தமது அறிவையும் தமது மனத்தையும் தமது தேகத்தையும் ஈடுபடுத்தினரோ அந்த ஒரு விஷயத்தில் அவர்கட்குத் தேர்ச்சி கிட்டக்கூடுமே யன்றி, சிறிதளவும் பாடுபடாத மதப்போக்கில் அவர்கட்கு உண்மை புலனாகும் என்று நம்புவதற்கு இடமில்லை. இவர்கள் கண்டுபிடித்த, பிடித்துக் கொண்டிருக்கும், பிடிக்கப்புகும் எல்லா விஞ்ஞான உண்மைகளும் கலைகளும் சாதனங்களும், சாத்தியங்களும் இறைவனால் இவ்வுலகம் படைக்கப்பெற்ற போழ்தே உண்டாக்கப் பெற்றனவாம். இவைகளில் ஓர் வியப்போ, பெரிய நலனோ உண்டாம் என்று கருதுவது ஏமாற்றமே.

விஞ்ஞானிகள் மத உணர்ச்சி உடையாரை ஏமாற்றுக் காரர்கள் என்றும் பித்தம்கொண்டவர்கள் என்றும் கூறுவதே போன்று, மத உணர்ச்சிக் காரர்களும் விஞ்ஞானிகளைக் குறை கூறுதல் சாலும். நீர் என்பது ஒரே வஸ்து என்று கூறிய ரசாயன பண்டிதர்கள் இன்று அஃது இரண்டு வஸ்துக்களால் ஒன்றுபட்ட ஒரு பொருள் என்று சாற்றுகின்றனர். நாளை அது மூன்றாலாயது என்றும், இறுதியில் ஒன்றே என்றும் பகரவும் முன்வரக் கூடும். விஞ்ஞானிகள் தாங்கள் கண்டுபிடித்த உண்மைகளை அடிக்கடி மாற்றிக் கூறிக் கொண்டு வரும் ஒரு சங்கடத் துறையை விட்டும் கடந்தனரல்லர். இறைவனது திரு நபியின் கட்டளைகளும் திருமறையும் என்றும் மாற்றப்படாதவாறு அமர்ந்து நிற்கின்றன வென்பதையும், விஞ்ஞானிகளின் தடுமாற்றத்தையும் ஒப்பு நோக்குவார்க்கு விஞ்ஞானிகளே பித்தர் ஆகவும், மயக்க முடையார் ஆகவும் இனிது புலனாவர். விஞ்ஞானிகள் தாங்கள் கண்டு பிடிக்கக் கருதியுள்ள ஒரு பொருளை ஆராய்ச்சி வாயிலாக அடைய முயற்சிக்கின்றனர். ஆயின் இறைவனின் உண்மை அடியார்கள் தம் சொந்த முயற்சியின் குறை குணத்தை உணர்ந்தவர்களாய் உள்ளத்தை இறைவனுக்கே ஒப்புவித்து, இறைவன் திருவுளச் சம்மதத்தினால் அம்மாசற்ற உள்ளத்தில் சோனையைப்போல் பொழியப் படுகின்ற உண்மைகளை அறிந்து தேருகின்றனர். உள்ளத்தில் ஒன்மைமுன்னிலையாக வைத்துக்கொண்டு, அம் முன்னிலையால் மாசுபடிந்த உள்ளத்தில் உண்மையைக் காண ஆவல் கொண்டு முயற்சிக்கும் விஞ்ஞானிகளினும், உள்ளத்நல் தூய்மை என்பதையே நிறையுமாறு செய்து அதனையும் இறைவனுக்கே சமர்ப்பித்து அவனருளால் உண்மையைக் காண முயற்சிற்கும் மெய்யடியார்கள் எத்துணை சிறந்தவர்கள் என்பதை அன்பர்கள் நினைத்துப் பார்ப்பார்களாக. ஆகாய விமானங்களும், இரயில் வண்டிகளும், பிறவும் நம் பெரியார்கள் மனத்தில் கண்ட பொருள்களே யன்றி புதியன வல்ல. இவைகளைக்கண்டு வியப்படைவார் இறைவனின் திருச்செயல்களைக் கண்டு வியப்பெய்தற்கு ஆற்றலில்லா, அருளில்லா, அறிவில்லா மக்களேயாவர். எனவே தற்கால விஞ்ஞானச் சாதனங்களை உயரியன வென்று பாராட்டி விஞ்ஞானிகள் இறைவனையும், மற்றும் அவனது திருமறை, திருத்தூதரின் திருமொழிகள் இவைகளை மறுத்துக்கூற முன்னெழுவது என்னே, என்னே!

விஞ்ஞானிகளைப் போன்றே விஞ்ஞானிகளல்லாதாராயும், மதபக்தர் அல்லாதாராயும் உள்ள சிலர் மதபக்தர் போன்று வேடம் பூண்டு, மதக் கட்டளைகளையும் விஞ்ஞானக் கூற்றுக்களையும் சமாதானப்படுத்திப் பேசியும் எழுதியும் பிரசாரம் புரிந்தும் வருகின்றனர். இவர்கள் மதத்தை அறவே கைநெகிழவிட சமுகப் பயம் கொண்ட கோழைகளாவர். இவர்கள் சமுகம் தூற்றுமே என்றஞ்சி மத உண்மைகட்கு தத்துவார்த்தங்கள் கூறுவர். இறைவனின் இன்மொழிகள் மக்களால் காலத்திற்கேற்பப் பொருள் கொள்ளத் தக்கனவன்று. கூறியவைக்கு நேர்பட யாது பொருள் எல்லார்க்கும் தோற்றுமோ அப்பொருளே அம்மொழிகள் போதிப்பனவாம். தன் மக்கள் தத்தம் அறிவுக்கும் காலதேச வர்த்தமானத்திற்கும் ஏற்ப ஒரு மொழிக்குப் பல்வேறு பொருள் காண வேண்டும் என்பது இறைவனின் திருநோக்கமல்ல. உள்ளது உள்ளவாறே தோற்றக்கடவது என்பதே இறைவனின் திருநோக்கமாக, ஐயந் திரிபறப் போதிக்கப் பெற்ற சுவர்க்கம், நரகம்போன்ற பதங்கட்கு விஞ்ஞானப்பித்துக் கொண்டார் சிலர் நிலையென்றும், மனோபாவம் என்றும், அவை உண்மையில் இலவாம் என்றும் தத்துவார்த்தங்கள் கூறுகின்றனர். சுவர்க்கம் என்பதை விஞ்ஞானிகள் ஒப்புக்கொள்ளவில்லை யாதலால், இம் மத—விஞ்ஞான வெளவால்களும் விஞ்ஞானிகட்கும் மதப்பற்றுடையார்க்கும் இடையில் நின்று சமாதானமான சில கூடா அர்த்தங்களைப் புகுத்தத் துணிபு கொள்கின்றனர். சில நூற்றாண்டுகட்குப் பின்னர் விஞ்ஞானிகள் வேறு சில 'உண்மை'களைக் கூறத் துவங்குவரேல் அவ் 'வுண்மை'கட்கு ஏற்ப இம் மத விஞ்ஞானிகளும் வேறு தத்துவார்த்தங்கள் கூறத் தலைப்படுவர் போலும்! உண்மை மொழிகளை உள்ளவாறே பொருள்படுத்தல் வேண்டுமேயன்றி, தத்துவார்த்தம் கூறப்புகின் அஃது ஒன்று நூறு கோடியாய்ப் பெருகி மக்களை மயக்கத்திலே ஆழ்த்தும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று. எனவே, விஞ்ஞானிகள் ஒரு காலத்தில் தாங்கள் தம் சிற்றறிவினால் கண்டு பிடித்த வியப்புச் சாதனங்களும் 'உண்மை'களும் ஏமாற்றங்களே என்று உண்மையை அறிந்தவர்களாய் மீண்டும் உண்மை மதத்தைத் தழுவி, உண்மைப் போதனைகளை திருமறை வாயிலாக ஓர்ந்து, தம் வாணாட்களை வீணாட்களாக்கியமைக்கு வருந்துவர். இவர்கள் விஞ்ஞான 'உண்மை'கள் யாவும் இறைவனின் மெய்ஞ்ஞான உண்மைத் திவலைகளின் சாயல்களினும் தாழ்ந்த கானல் நீர்த்துளிகளாகும். ஆதலின் 'அன்பர்கள் வியக்கத்தகும் கருவிகளைச்'செய்யும் விஞ்ஞானிகளைக் கண்டு மயக்கெய்தாதாராய், எல்லாவற்றினும் மிகப் பெரியது அவனருளே என்று நினைத்து அவன் கட்டளைச் சிரமேற் தாங்கி நல் வாழ்க்கையை கடைப்பிடிப்பார்களாக.

---

### மதிப்புரை

"அஸ்ஸவ்மு, வஜ்ஜகாத்" என்னும் நூல் 1. வரப்பெற்றோரும் அஃது அடியக்கமங் ...லம் அரபிக் கலாசாலை ஆசிரியர் ஜமீன் ஆத்தூர் ஆ. செ. இ. அப்துஸ் ஸமத் ஸாஹிபு (மவ் ...லவி பாஜில்) அவர்களால் இயற்றப்பட்டதாகும். அதில் நோன்பின் நுண்ணிய நோக்கங்க...ளும் தராவீஹ் தொழுகை முதலிய மஸ்அலாக்களும் ஜக்காத், பித்ரு ஸதக்கா முதலியவை...ளும் மிக தெளிவாக எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. இதை இக்காலத்தில் ஒவ்வொருவரும் வாங்கிப் படித்துப் பயன் பெறவேண்டிய தவசியமென்றே கருதுகிறோம்.

# பா. தாவுதுசாவின் வழக்கு விசாரணை விபரம்

சென்னை ஹைகோர்ட்டு

ஒரிஜனல் ஸூட் நே. 317 of 1930.

வாதிக் கம்பெனியின் ஹெட் கிளெர்க்கை மிஸ்டர் மாக்கட் விசாரணை செய்தபோது கூறியதாவது:—

திரு, மாக்கட்:—லாங்மென்ஸ் கிரீன் கம்பெனியில் நீர் தலைமைக் குமஸ்தாவா ?

திரு, எஸ், ஆர். ஸீ. ஆம்.

வினா:—"இஸ்லாமியக் கதைகள் (முஹம்மது நபீ, அபூபக்கர் ஸித்தீக்) என்னும் நூற்களின் பிரசுரக் கர்த்தாக்கள் உமது கம்பெனி யாரா ?

விடை:—ஆம்.

வினா:—அதில் எத்தனை நூல்கள் உள ?

விடை:—நான்கு.

வினா:—இவை உம்முடைய நூல்களின் மொழி பெயர்ப்புக்கள்தான் என்று பிரதிவாதியால் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளதா ? இம் மொழிபெயர்ப்புக்களை எப்பொழுது தெரிந்து கொண்டீர் ?

விடை:—எப்ரல் 1930ல்

வினா:—பிரதிவாதிக்கு இதைப்பற்றி அறிவித்தீரா ?

விடை:—முதன்முதலில் நான் இதைப் பற்றி மானேஜருக்குத் தெரிவித்தும் பின்னர், லண்டன் மானேஜருக்கு அறிவித்தே அதன் பேரில் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியிருந்தது.

வினா:—இவற்றின் மொழி பெயர்ப்புக்களின் உரிமையை நீங்கள் பிறருக்கு ஒப்புவித்துவிட்டீர்களா ?

விடை:—தமிழில் மொழி பெயர்க்கும் உரிமையைப் பெறுமாறு, ஒரு பிரசுரக்கம்பெனியாருடன் ஒப்பந்தம் பேசி முடிந்துவிட்டது. அவர்கள் ஏற்கெனவே இவற்றிற்கு மொழி பெயர்ப்புக்கள் கிடையாவா என்று எங்களிடம் உறுதி கேட்டார்கள்.

வினா:—அது எந்தக் கம்பெனியார் ?

விடை.—சென்னை முஸ்லிம் சங்கத்தார்.

வினா:—மொழி பெயர்த்துக் கொள்ளும் உரிமையை எவ்வளவு தொகைக்கு விற்க இருந்தீர்கள்?

விடை:—தமிழுக்கு மட்டும் ரூபாய் 500க்கு.

வினா:—இத்தகைய மொழி பெயர்ப்புக்கள் இருக்கின்றனவென்று உளவாக உமக்குத் தெரிவித்தது யார்?

விடை:—சென்னை முஸ்லிம் சங்கத்தார் எம்மிடம்உறுதி கேட்டபோழ்து வேறு மொழி பெயர்ப்புக்கள் இல்லை என்றும், இருந்தால் காண்பிக்கலாம் என்றும் நாங்கள் கூறினோம் அதன் பேரில் அவர்கள் இவற்றை காண்பித்தார்கள்.

வினா:—உமது முதல் புத்தகம் எப்பொழுது பிரசுரமாயது ?

விடை:—1926 ம் ஆண்டு மே முதல் தேதியிலிருந்து எப்ரல் 30 ந் தேதிக்குள் இரண்டாம் புத்தகமும், அதே ஆண்டில். மூன்றுவது நான்காவது புத்தகங்களும் 1926-1927-ல் பிரசுரிக்கப்பெற்றன.

வினா—உமது புத்தகங்களின் விற்பனை ஜாபிதா உளதா ? முதல் புத்தகத்தில் எத்தனைப் பிரதிகள் பிரசுரிக்கப் பெற்றன.

விடை:—முதல் வெளியீட்டில் 5000 பிரதிகள் அச்சிட்டோம்.

வினா:—தயவுசெய்து கணக்கைப் பாரும்; நீர் கூறுவது சரிதானா ? உமது புத்தகங்களில் காண்பித்துள்ளபடி கணக்கு ஒத்து வருகின்றதா ?

விடை:—ஒரு குறிப்பைத் தவிர மற்றெல்லா விவரங்களும் சரியாயுள்ளன. 422 என்பது 424 ஆக இருக்கவேண்டும்.

வினா:—மற்றெல்லாப் புள்ளிகளும் சரியாகயிருக்கின்றனவா ?

விடை:—ஆம்.

வினா—முதல் புத்தகத்தில் என்ன லாபம் சம்பாதித்தீர்கள்?

விடை:—இதைப் பற்றிய வரையில் மொத்த இலாபம் நூற்றிற்கு 33-ம் மூன்றில் ஒன்றும்; முதல் வெளியீட்டில் இந்தக் கணக்கு அவ்வளவு ஒத்திராது. ஆனால் மற்ற எல்லா வெளியீடு கட்கும் இச்சராசரிக் கணக்கு சரியாக இருக்கின்றது.

வினா:—முதல் புத்தகத்தின் விலை என்ன?



விடை:—முதல் புத்தகம் விலை அணா 3. இரண்டாம் புத்தகம் அணா 5· முதல் வெளியீடு கட்குப் பிரசுரக்காரர்கள் சித்திரப் பிளாக்குகள் தயாரிக்க பணம் கொடுத்தாக வேண்டும். இதெல்லாம் கணக்குப் போட்டுப் பார்த்தால் தான் தெரியும். அநேகமாய் இரண்டாவது மூன்றுவது வெளியீடுகளைக் குறைந்த விலைக்குக் கொடுப்பதுண்டு.

வினா:—பிரசுரத் தேதிகளும் விற்பனைத் தேதிகளும் குறிப்பிட்டபடி சரியானவையா?

விடை:—சரியானவையே.

வினா:—முதல் புத்தகம் எப்பொழுது பிரசுரிக்கப் பெற்றதென்று நீர் உண்மையாய்க் கூற முடியுமா?

விடை:—முடியாது.

வினா:—மேலே சொல்லியிருக்கும் விபரங்களைத் தவிர பொதுவாக நீங்கள் உங்கள் புத்தகங்களை விற்கும் முறை யாது ?

விடை:—முதல் இரண்டு வருஷக் காலத்திற்குப் புத்தகங்கள் அத்துணை விற்பனையாக மாட்டா. பொதுஜனங்கள் புத்தகங்களைப் பற்றி அறிந்து கொண்ட பின்னர் தான் புத்தகங்கள் பரபரப்பாய் விற்பனையாகும். முதல் வெளியீட்டில் நாங்கள் எதிர் பார்த்த விற்பனை ஏற்படவில்லை.

வினா:—தமிழ் மொழி பெயர்ப்புரிமைகளை யாருக்கேனும் விற்று விட்டீர்களா ?

விடை: ஒப்பந்தம் பேசி முடித்திருக்கின்றோம்.

வினா:—பிறகு விற்று விட்டீர்களா?

விடை:—ஒருவரும் இவ்வுரிமையை விலைக்குவாங்க முன்வரவில்லை.

திரு. கே. எஸ். இராஜகோபா லய்யங்கார்
குறுக்கு கேள்வி

வினா:—தமிழ் மொழி பெயர்ப்புரிமையை சென்னை முஸ்லிம் சங்கத்தார் வாங்க வந்ததாக்கூறினீர், அதற்கு ஆதாரம் காண்பிக்க முடியுமா?

விடை:—கீழே கையெழுத்திட்டவர்களின் பெயர் விளங்க வில்லை. இதோ கடிதம் உள்ளது; கடிதத் தலைப்பில் 'முஸ்லிம் சங்கம்' என்று அச்சுப் பொறிக்கப் பெற்றிருக்கின்றது.

வினா:—முஸ்லிம் சங்கத்தாரோடு சம்பந்தம் வைத்துக் கொண்ட கடிதங்கள் இருக்கின்றனவா?

விடை:—என் வக்கீல்களிடம் சில இருக்கலாம்.

வினா:—நீர் உறுதி கூற முன் வராமையால் அவர்கள் மொழி பெயர்ப்புரிமையை வாங்கவில்லை போலும்?

விடை:—மொழி பெயர்ப்புக்கள் ஏற்கனவே இருந்தால் அதனால் ஏற்படும் நஷ்டத்திற்கு எம்மை ஒப்புக் கொள்ளுமாறு கேட்டார்கள். மேலும் புத்தக மார்க்கட் நிலவரம் அறிந்து கொள்ளவும் தவணை கேட்டார்கள் நாங்கள் 1930 மார்ச்சு 1ந் தேதி வரைக்கும் தவணை கொடுத்தோம்.

வினா:—சென்னைப் பாட புத்தகக் கமிட்டியாரால் உமது புத்தகங்கள் அங்கீகரிக்கப் பெற்றுள்ளனவா ?

விடை:—இருக்கலாம்; தஸ்தாவேஜுகளைப் பார்த்துத்தான் தெரிவிக்க முடியும்.

வினா:—டெக்ஸ்ட் புக் கமிட்டியாரால் அங்கீகரிக்கப்பெற்ற நூல்களில் அங்கீகரிக்கப் பெற்றனவென்று குறிப்பிடுவது வழக்கமன்றோ ?

விடை:—அவசியமில்லை.

வினா:—பிரதிவாதியின் தமிழ் நூல்கள் எந்த வகுப்புக்கட்கு பாடபுத்தகங்களாக அமைக்கப்பெற்றுள்ளன வென்பதை கனம் நீதிபதிக்குத் தாங்கள் தெரிவிக்கவேண்டும்.

விடை:—என்னால் கூறமுடியாது. எமது புத்தக ஏஜண்டுகள் ஏற்கெனவே தமிழில் மொழி பெயர்ப்புக்கள் வழங்கிவருவதாக எம்மிடம் குறை கூறினார்கள்.

வினா.—ஆங்கில நூற்கள் எந்த வகுப்புகட்குப் பாட புத்தகங்களாக இருக்கின்றன?

விடை:—முதல் 'பாரம்,' இரண்டாம் 'பாரம்' பையன்கட்கு இருக்கக்கூடும். அவையெல்லாம் பள்ளிக்கூடங்களைப் பொறுத்து இருக்கின்றன.

பிரதிவாதி பா. தாவுதுசாவை
திரு, கே. எஸ். இராஜகோபாலய்யங்கார்
விசாரித்தல்

வினா:—நீர் தானா இவ்வழக்கிற் பிரதிவாதி?

விடை:—ஆம்.

வினா:—உமது தொழில் யாது?

விடை:—நான் ஒரு ஆசிரியரும், பிரசுரதாரரும் ஆவேன்.

வினா:—இப்பொழுது யாதாயினும் பிரசுரித்துக்கொண்டிருக்கின்றீரா ?

விடை:—ஆம். நான் ஒரு பத்திரிகையும் சில புத்தகங்களும் பிரசுரித்து வருகிறேன்—'முஹம்மது நபி சரித்திரமும், இதர புத்தகங்களும்.

வினு:—வழக்கிற்கண்ட நூல்களைப் பிரசுரித்த விவரத்தை கனம் நீதிபதிக்குத் தெரிவிக்கவேண்டும்.

விடை:—எனது நண்பர் ஒருவர் பர்மாவிலிருந்து இவற்றின் கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டுவந்து என்னிடம் விற்பதாகக் கூறினர். நான் குர்ஆன் மொழி பெயர்ப்புச் செய்வதிலும் நபிகள் நாயகம் சரித்திரம் எழுதுவதிலும் மற்றும் இதர காரியங்களிலும் ஈடுபட்டிருந்தேன்; ஆதலால் நான் இவற்றை பர்மாவிலிருந்துவந்த எனது நண்பரிடமிருந்து விலைக்கு வாங்கினேன்.

வினு:—என்ன ஒப்பந்தத்தில் வாங்கினீர்?

விடை:—கையெழுத்துப் பிரதிகட்கு 200 ரூபாய் கேட்டார். நான் தொகை கொடுத்துவிட்டு என் 'டைரி'ப் புத்தகத்தில் குறிப்பிட்டுக் கொண்டேன்.

வினு:—டைரியில் கண்ட ரசீது இதுதானு?

விடை:—ஆம்.

வினு:—யார் பேரில் இப் புத்தகங்களைப் பிரசுரிப்பது என்பதைப்பற்றி உமக்கும் (உமது நண்பர்) முஹம்மது ஹுசேனுக்கும் உடன்பாடு யாதேனும் உண்டோ?

விடை:—திருத்தவும், மாற்றவும், சரிப்படுத்தவும் போன்ற எல்லா உரிமைகளையும் என் பிரியம்போல் நடத்திக்கொள்ளுமாறு விற்று விட்டார்.

வினு:—கையெழுத்துப் பிரதிகளில் திருத்தம் செய்திருக்கின்றீரா?

விடை:—ஆம்; அவைகளில் குறிப்புகளும் செய்திருக்கின்றேன். 'ஆங்கில நூல்களையும் தமிழ் நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்தால் திருத்தங்கள் நன்கு விளங்கும்.

வினு.—தமிழ் நூல்கள் எந்த வகுப்புக்கட்கு உபயோகிக்கப்படுகின்றன?

விடை:—3-வது 4-வது வகுப்புக்கட்கு.

வினு:—வாதி கம்பெனியாரின் நூல்கள் எந்த வகுப்புகட்கு உபயோகிக்கப்படுகின்றன வென்று கூறமுடியுமா?

விடை:—3-வது 4-வது 'பாரங்'கட்கு (Forms).

வினு:—உமது இரண்டு புத்தகங்களையும் பாடப்புத்தகக்கமிட்டியார் அங்கீகரித்தனரா?

விடை:—ஆம்.

வினு:—வாதிகள் கூறும் ஆங்கில நூல்களைப்பற்றி நீர் எப்பொழுதேனும் தெரிந்திருக்கிருக்கின்றீரா?

விடை:—தெரியவே தெரியாது.

வினு:—இதுபற்றி உமக்கும் வாதி கம்பெனியார்க்கும் நிகழ்ந்த கடிதப்போக்குவரவை நீர் அறிவீரா?

விடை:—அறிவேன்.

வினு:—1930 மார்ச்சு முதலில் தானு நீர் முதன்முதலாக இது சம்பந்தமாக கடிதம் எழுதினீர்?

விடை:—ஆம்.

வினு:—அதில், இனி இப்பிரதிகளை (முஹம்மது நபீ அபூபக்கர் ஸித்தீக்) விற்பதில்லையென்றும் தம்மால் அச்சான பிரதிகளை அவர்கட்கு ஒப்புவித்து விடுவதென்றும் வாதிகட்குத் தெரிவித்திருந்தீரல்லவா?

விடை:—ஆம்.

வினு:—வழக்கு தாக்கலானவுடன் விற்பனையாகாத பிரதிகளைக் கோர்ட்டில் ஒப்புவித்து விடுவதாகவும், வாதிகட்கு நியாயமான நஷ்ட ஈட்டைக் கொடுத்து விடுவதாகவும், தெரிவித்திருக்கின்றீரா?

விடை:—ஆம்.

வினு:—வாதிகளிடம் பிரதிகளைக் கொடுத்தீரா?

விடை:—ஆம்.

வினு:—நீர் கொடுத்த நஷ்ட ஈடு என்ன?

விடை:—200 ரூபாய்க்கு நான் அவர்களிடம் செக்குக் கொடுத்தேன்.

வினு:—ஏற்பாடு செய்த பணத்தைக் கொடுக்க இன்னும் விரும்புகின்றீரா?

விடை:—ஆம்.

மிஸ்டர் மாக்கட்டின், குறுக்கு விசாரணை.

வினு:—உமது செக்கு பணமாக மாறினவா?

விடை:—கணக்கு வக்கீலிடமிருக்கிறது.

வினு:—கையெழுத்துப் பிரதிகளை உமக்கு விற்பனை செய்தவரை எவ்வளவு காலமாகத் தெரியும்?

விடை:—1921-ம் வருஷத்திலிருந்து.

வினு:—அவர் இதன்றி வேறு இதர புத்தகங்களை மொழி பெயர்த்திருக்கின்ருரா?

விடை:—எனது மாத சஞ்சிகைக்கு அவர் வியாசங்கள் எழுதியனுப்புவார்.



வினு:—அவர் வேறெதனையும் மொழி பெயர்த்ததை நீர் அறிவீரா?

விடை:—அவர் எனது மாத சஞ்சிகைக்கு வியாசங்கள் அனுப்புவதுண்டு.

வினு:—உமக்காக அவர் ஏதாகிலும் மொழி பெயர்ப்பு வேலை செய்திருக்கின்ருரா?

விடை:—எனக்காக செய்ததில்லை.

வினு:—வேறு யாருக்காவது மொழி பெயர்ப்பு வேலை செய்தது உமக்குத் தெரியுமா?

விடை:—நான் அதுபற்றி விசாரிக்கவில்லை. அவர் திறமையாளி என்று நான் அறிவேன்.

வினு:—அவரது படிப்பு என்ன?

விடை:—அவர் பழைய மெட்ரிகுலேஷன் படித்தவர்; வியாசங்கள் எழுதிவந்தார். தமிழில் சில புத்தகங்களை எழுத சக்திவாய்ந்தவரென்றே எனக்குத் தெரிகிறது.

வினு:—அக் கையெழுத்துப் பிரதி முழுவதையும் அவரே எழுதினுரா?

விடை:—அவரது கையெழுத்தே.

வினு:—அந்தக் கையெழுத்துப் பிரதி அழிக்கப்பட்டதா?

விடை:—இந்த விஷயத்தில் இத்தகைய இடைஞ்சல் விளையுமென்று நான் எதிர்பார்க்கவில்லை. நான் பல புத்தகங்களையும் பத்திரிகையும் பிரசுரித்து வருகின்றேன்.

வினு:—கையெழுத்துப் பிரதி எங்கே?

விடை:—எனக்குத் தெரியாது. அச்சுக்கூடத்தில் காணுமற் போயிருக்கலாம்.

வினு:—காணுமற் போனதென்று நினைக்கின்றீரா?

விடை: ஆம். 3 வருஷங்களுக்கு மேற்பட்ட எந்தக் கையெழுத்துப் பிரதியையும் நான் சேமித்து வைப்பதில்லை. அச்சுக்கூடம் நடத்துவோர் அங்ஙனம் சேமிப்பதில்லை.

வினு:—கையெழுத்துப் பிரதியை விற்பவரிடமிருந்து பணங்கொடுக்கும்போது, எதிர்பார்க்கும் நஷ்டத்திற்கு ஏற்பாடு செய்துகொள்வது வழக்கமல்லவா?

விடை:—இடைஞ்சல் ஏற்படுமென்று நான் எதிர்பார்க்கவில்லை.

வினு:—பொதுவாக அது வழக்கமல்லவா?

விடை:—பிரசுர உலகில் பொதுவாகயிருக்கும் வழக்கம் எனக்குத் தெரியாது?

வினு:—எவ்வளவு காலமாக அவர் உமக்கு நண்பர்.

விடை:—1921-ம் வருஷத்திலிருந்து.

வினு:—அவரது வயது என்ன?

விடை:—சுமார் 40.

வினு:—இந்தியாவில் அவர் வசித்திருக்கின்ருரா?

விடை:—இந்தியாவில் அவரது சொந்த ஊர் என்னவென்பது தெரியாது. அவர் ஓர் இந்தியர். அவரது சொந்தவூர் தெரியாது.

வினு:—எவ்வளவு காலமாக அவரைத் தெரியும்?

விடை:—1921-ம் வருஷத்திலிருந்து.

வினு:—எத்துணைமுறை அவரைப் பார்த்திருக்கின்றீர்?

விடை:—நாலு அல்லது ஐந்து முறை ரங்கூனிலிருந்து வரும்போதும் அங்கே போகும்போதும் அவர் சென்னையில் இறங்கி என்னைப் பார்ப்பதுண்டு.

வினு:—இதைத்தவிர வேறு எந்தப் புத்தகத்தையாயினும் எழுதினுரென்பது தெரியாதல்லவா?

விடை:—எனக்குத் தெரியாது.

வினு:—ஏதாயினும் ஒரு பக்கத்தை எடுத்துக்கொள்ளவும். "கலிபாக்கள்" என்ற முதல் அத்தியாயத்தையே எடுத்துக்கொண்டு மொழி பெயர்ப்பைக் கவனியும்.

விடை:—ஆம்; எனது பிரதிக்கும் மூல மொழி பெயர்ப்புக்கும் உள்ள வேற்றுமையைக் கவனியுங்கள். எனது புத்தகத்தில் வேறுபாடு காணலாம் இதிலிருந்து மூல மொழி பெயர்ப்புக்கும் எனது மொழி பெயர்ப்புக்கும் உள்ள வேற்றுமை தெரியவரும். சிகப்புப் பென்சலில் குறித்துள்ள பாகங்களை யெல்லாம் மூலத்தையொட்டி சொல்லுக்குச் சொல் மொழி பெயர்த்துள்ளேனென்பதை ஒத்துக் கொள்கின்றேன்.

வினு:—மிக்கப் படித்தவர் எழுதியதுபோலல்லவோ நடை விளங்குகிறது; அது உண்மையல்லவா?

விடை:—நான் ஆங்கில மொழியில் வல்லவனல்லன்.

வினு:—தமிழை எடுத்துக் கொள்ளுங்கள்; அத்தகைய நடையில் அவர் எழுதுவாரென்று நீர் கூறுகின்றீரா?

விடை:—அது முஹம்மது நபியின் வாழ்க்கை; யார் வேண்டுமானுலும் இப்புத்தகத்தி

லிருந்தும் அவ்வாழ்க்கை சம்பந்தமான விஷயங்களை எடுத்துக் கொள்ளலாம். தமிழ் நடை சுயமானது.

வினா:—அந்தப் புத்தகத்தை எழுத அவருக்கு அதிகாரமும் திறமையும் உண்டென்பது உமக்கு வியப்பை அளிக்கவில்லையா?

விடை:—எனது மாதசஞ்சிகைக்கு வியாசங்கள் எழுதிவந்தா ரென்பதின் பேரில், நான் அவரிடம் நம்பிக்கை கொண்டேன். அவருடன் பேசியிருக்கின்றேன். அவரது பிரசங்கங்களையும் கேட்டிருக்கின்றேன்.

வினா:-முன்பு அவரை நீர் எங்கு சந்தித்தீர்'

விடை:—இலங்கையில்.

வினா:—4 தடவை பார்த்ததில், அது ஒன்று?

விடை:—எனக்குத் தெரியாது. சென்னையில் அவரைச் சந்தித்திருக்கின்றேன்.

வினா:—இந்த வியாச்சிய விஷயமாக அவருக்கு எழுதினீரா?

விடை:—பர்மாவுக்கு நான் எழுதினேன். அங்கே அவரது விலாசத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

வினா:—தமிழ் பிரசுரங்கள் தங்கள் பதிப்புரிமையைப் பாதிப்பதென்று லாங்மன்ஸ் கிரீன் கம்பெனியார் உமக்கு எழுதியவுடனே அவருக்கு நீர் அத் தகவலை அறிவித்தீரா?

விடை:—பெகுவில் பெரிய தெருவிலுள்ள முஹம்மது உசேன் என்ற மேல் விலாசத்திற்கு எழுதினேன்.

வினா:—பூகம்ப அதிர்ச்சி எற்படும் முன்பா நீர் கடிதம் எழுதினீர்?

விடை:—ஆம். அதற்கு முன்புதான்.

வினா:—பதில் என்ன கிடைத்தது?

விடை: அவர் மலேயாவில் இருப்பதாக பிறகு அறிந்தேன்.

வினா:—போலீசாரிடம் புகார் விசாரித்தீரா?

விடை:—போலீசாரிடம் புகார் செய்ய அவசியமே இல்லையே.

வினா:—நீர் மோசம்போனீர் என்று நினைக்கின்றீரா?

விடை:—ஆம்; அப்படி நினைத்ததுண்டு. இங்கே நின்றுகொண் டிருப்பதற்கு அதுவே காரணம்.

வினா:—அப்புத்தகம் மூலத்திலிருந்து எளிய நடையில் மொழிபெயர்க்கப்பட்டதல்லவா?

விடை:—நீர் அப்படி உத்தேசிக்கின்றீரோ? எனக்குத் தெரியாது. அவர் இந்தக் கையெழுத்துப் பிரதிகளை விலைக்கு கொடுத்தார் வர்த்தக முறையில் நான் வாங்கினேன். நான் பாடசாலைப் புத்தகங்களைப் பிரசுரிப்பவனல்லன். அத்துறையில் எனக்கு அனுபவமும் கிடையாது. பாடசாலை புத்தகங்களைப்பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.

வினா:—மார்க்கட்டில் ஆங்கில புத்தகமிருக்கிறதா யென்பதை விசாரிப்பது அவசியமென்று நீர் நினைக்கவில்லையா?

விடை:—தமிழ் உலகில் அத்துறையில் ஏதாகிலும் தமிழ் புத்தகமிருப்பதாக அறிய முடியவில்லை. இந்தத் தமிழ் புத்தகத்தைப் பொறுத்தவரையில், நான் பரிசீலனை செய்தேன். பாதகமானதைக் காணவில்லை. தமிழ்ப் புத்தகங்களைப் பிரசுரிப்பதோடு 'நான் தமிழ்ப் புத்தகங்களையும் விற்பனை செய்து வருகின்றேன்.

வினா:—உமக்குச் சொந்தமான தென்று அப்புத்தகத்தை எப்பொழுது வெளியிட்டீர்?

விடை:—இப் புத்தகங்களுக்கு எல்லாப் பதிப்புரிமையை அளித்ததோடு, திருத்தங்கள் செய்யவும் எனக்கு அனுமதி அளித்தார், பொது ஜனங்களைப் பொறுத்தவரையில், வேறொருவரின் பெயரையே வெளியிடுவது சரியல்லவென்று நினைத்தேன்.

வினா:—வேறொருமனிதர் என்று கூறுவ தன் தாத்பரியம் என்ன?

விடை:—லாங்மன்ஸ் கம்பெனியார் அத் தகைய கையெழுத்துப் பிரதியை இன்னாரிடம் வாங்கியதாக கூறி யிருக்கவில்லை.

வினா:—ஆசிரியர்களின் பெயர்களைப் பிர சுரிப்பார்க ளல்லவா?

விடை:—ஆம். அது உண்மையாயு மிருக்க லாம்; பொய்யாகவு மிருக்கலாம்.

வினா:—நீர் அந்தப் புத்தகத்தை மொழி பெயர்க்க வில்லை யென்பது வாஸ்தவமா

விடை:—நான் மொழிபெயர்க்கவில்லை எனக்கு மொழிபெயர்க்கத் திறமையுண் டென்பதில் ஐயமில்லை. ஆனால் நான் அப் புத்தகத்தை மொழி பெயர்க்கவில்லை.

கோர்ட்டு:—நீர் சரிவர டைரி வைப்ப தில்லையா?

விடை:— எப்பொழுதாகிலும் அதி குறிப்பு எழுதுவேன்.



கோர்ட்டு:—அந்த முழு டைரிப் புத்தகத்திலும், 16-2-1927 ல் இந்த ஒரு குறிப்புத் தான் உளது போலும்?

வினா:—ஏனைய குறிப்புகளை நான் அடித்து விட்டேன்.

கோர்ட்டார்:—இப் புத்தகத்தின் முன்னுரையில் நீர் இனி நபிகள் நாயகம் அவர்கள் சரிதைக்குப் பின்னர் நான்கு கலீபாக்களின் சரிதைகளையும் வெளியிடப் போவதாகக் கூறியிருக்கின்றீ ரல்லவா?

விடை:—சில மௌலவிகளைக் கொண்டோ நேராகவோ அவைகளைப் பிரசுரிக்க எண்ணியே அவ்வாறு தெரிவித்திருந்தேன்.

வினா:—முதல் நூல்களிலிருந்து பிற மதஸ்தர் கட்குப் பாதக மில்லாத உண்மை நிகழ்சிகளையே இப்புத்தகங்களில் வெளியிட்டிருப்பதாகக் கூறியிருக்கின்றீரே?

விடை:—எனது நண்பர் இவைகளைத் தொகுத்தார். முதல் நூல்களிலிருந்தே இவைகளைத் தொகுத்ததாகவும் அவர் தெரிவித்தார்.

வினா:—அதனால் உமக்குச் சந்தேகம் தோன்றவில்லையா? விடை:—இல்லை.

வினா:— பள்ளிக்கூடப் பிள்ளைகட்கான பாடப் புத்தகங்கள் பலவற்றைப் படித்துப் பார்த்து இவ்வாறு தொகுத்ததாகவே கூறப்பட்டுளதே?

விடை:—அதுதான் நான் கூறவந்ததின் கருத்து.

கோர்ட்டார்:—அப்படியாயின் நீர் உமது முன்னுரையில் அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப் பெற்ற நபிகள் நாயகமும், அவர்களது நான்கு தோழர்களும் என்னும் புத்தகத்தை தழுவி அந்நூல் வரையப் பெற்ற தென்றல்லவா தெரிவித்திருக்க வேண்டும்? அந்தப் புத்தகத்தைப் பற்றி நீர் அறிவீரா?

விடை:—அறிவேன் பிரபுவே!

கோர்ட்டார்:—லாங்க்மென்ஸ் க்ரீன் அண்டு கம்பெனியாராலல்லவா அந்தப் புத்தகம் பிரசுரிக்கப்பட வேண்டும்?

விடை:—ஆம் பிரபுவே! ஆனால் நான் கையெழுத்துப் பிரதிகளை வாங்கிய பொழுது அந்தப் புத்தகங்கள் இருப்பதாக எனக்குத் தெரியவே தெரியாது.

கோ:—ஏனைய கையெழுத்துப் பிரதிகள் எங்கே?

விடை:—நான் பலரிடமிருந்து வாங்கியிருக்கின்றேன்.

வினா:—அவைகட்கு உமது டைரிப் புத்தகத்தில் ரசீதுகள் உளவோ?

விடை.—தனியாக ரசீதுகள் வைத்திருக்கின்றேன்.

கோ:—உமது இரண்டாவது புத்தகத்தின் முதல் ஏட்டில் அதன் இரண்டாம் வெளியீடு வரும் என்றும், அது சர்க்காரால் அங்கீகரிக்கப் பெற்றுள்ள தென்றும் தெரிவித்திருக்கின்றீரே? அது என்ன புத்தகம்?

விடை:—1923 அல்லது 1924ல் பிரசுரமாயதீர்க்கதரிசி முஹம்மது அவர்களும், அவர்களது நான்கு சீடர்களும் என்னும் நூல்.

கோ.—யாரால் பிரசுரிக்கப் பெற்றது?

விடை:—என்னால்

கோ:—ஆனால் அது லாங்மென்ஸ் க்ரீன் கம்பெனியாரால் பிரசுரிக்கப் பெற்றுள்ளது என்று நேற்றைய விசாரணையில் பதில் கொடுத்தீரே?

விடை:—இல்லை; பிரபுவே!நான் தடுமாறிப் போய் விட்டேன். இதுதான் முதன்முதலில் பிரசுரமான புத்தகம்

கோ:—அதன் தமிழ்ப் பெயர் யாது?

விடை:—தீர்க்க தரிசியும் அவர்களின் நான்கு நேர் சீடர்களும்.

கோ.—அதைத்தான் அதன் பெயரும் முன்னுரையும் குறிக்கின்றனவோ?

விடை:—ஆம். (விசாரணை முற்றிற்று)

---

சந்தா நேயர்களுக்கு

1931ஆம் ஜனவரிமீ முதல், வீ. பீ. முதலியன தபாலாபீஸில் 3 நாளைக்கு மேல் வைத்துக்கொள்ளப்பட மாட்டாதென போஸ்டாபீஸார் அறிக்கை வெளியிட்டிருப்பதால், நேயர்கள் முன்னெச்சரிக்கையாகவே V. P. யைப் பெற்றுக்கொள்வது கஷ்டத்துக்குள்ளாகிறோம். ஆதலின் V. P. க்கு ஆர்டர் செய்யாமல் சந்தாவை முன் பணமாக அனுப்பி பத்திரிகையைப் பெற்றுக்கொள்ளும்படி கோருகின்றோம். தவிர கடந்த வருஷத்தில் சந்தாதாரரா யிருந்து நமது மாசிகையை ஆதரித்து வந்த கனவான்கள், நடைபெறும் 1931-ம் வருஷத்துக் குண்டான சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பிவைத்து மென்மேலும் அபிவிருத்திக்குக் கொண்டுவருவார்களென எதிர்பார்க்கின்றோம்.

மானேஜர்



# இஸ்லாமும், பர்தாவும்

ஷம்ஷுல் உலமா, முப்த்தீ குலாம் ரசூல் சாஹிப் எழுதியது.

(சென்ற மாதத்தொடர்)

### கோஷாவின் விபரம்

(8) வினு:—துருக்கிமிஸர், அரப் இத்தேசங்களிலுள்ள பெண்கள் திரையின்றி வெளியில் உலவி வருவதை அவ்விடங்களிலுள்ள (உலமாக்கள்) மார்க்க அறிஞர்கள் தடுத்து அவர்கள் வெளியில் செல்லவேகூடாது வீட்டடங்கியிருக்கவேண்டுமென ஏன் கட்டளையிடுகின்றார்களில்லை? அதன் காரணம் யாது?

விடை:—ஒவ்வொரு காலத்திலுள்ள தீனி (மார்க்கக் கட்டளைகளைச் சிறைமேற் தாங்கி நடக்கும்) உலமாக்களும், நன்மையைக் கொண்டு ஏவுவதையும் கெடுதியைவிட்டு விலக்குவதையும் தங்கள் வேலையாகக் கருதியிருந்ததால், அக்காலத்தில் ஏற்படும் கெடுதிகளை அவர்கள் பார்த்தவுடன் அவசியம் அதை விலக்குகின்றவர்களாகவே யிருந்தார்கள். அவ்வாறு அவர்கள் தங்கள் கடமையைச் செய்யாதிருப்பார்களாயின் (கியாமத்) மறுமை நாளில் அவர்கள்பேரில் கடுமையான கேள்வி ஏற்படும். ஆனல் பெரும் பாவம், பஸாது செய்கிறவர்கள், கெட்டவர்கள், வழிகேடர்கள் நவீன சீர்திருத்தக்காரர் முதலியவர்கள் உலமாக்களின் பேச்சைக் கேட்பதெங்ஙனம்? அதிலும் வீரமற்ற ஆண்களும், நாணமற்ற பெண்களும் தன் மன இச்சை, கெட்ட ஆசை இவைகளை விட்டுவிடுவதில் அல்லாஹ்வுக்கும் அவனது 'ரஸூ'லுக்கும் பயப்படுகின்றார்களல்லர். உலமாக்கள், மார்க்க பக்தர் இவர்களின் வார்த்தைக்கும் செவிமடுக்கின்றார்களல்லர்; உதாரணமாக இதே கோஷா (பெண்கள் வெளியிற் செல்லாமல் வீட்டடங்கி யிருக்கும்) விஷயமாக குர்ஆன் ஷரீபிலும், சிறப்புத் தங்கிய ஹதீதுகளிலும் பெண்கள் வீட்டடங்கி யிருக்கவேண்டும்; துப்பட்டி போர்த்துக்கொள்ளாமல், தன் அழகை வெளியாக்கிக்கொண்டு வெளியில் திரியக்கூடாது; அப்படித் திரியும் பெண்கள்மீது ஆண்டவனது கோபப் பார்வை ஏற்பட்டு, கோடிய வேதனைக்கு ஆளாகவேண்டு" மென எவ்வளவு திட்டமாகக் கூறப்பட்டிருக்கின்றது. மேலும் குர்ஆன், ஹதீதுகளின் விரித்துரை ஆசிரியர்களும் இவ்விஷயத்தில் ஏற்படும் அள வற்ற கெடுதிகளை சாங்கோபாங்கமாய் எடுத்துக் காண்பித்திருக்கின்றார்கள். இத்தன்மைத் தான விலக்குகள் ஏற்பட்டிருந்தும் ஆயிரக்கணக்கான பெண்கள் வேடிக்கைப் பார்ப்பதற்காக 'தர்கா' முதலிய இடங்களுக்கு வெளியிற் கிளம்பி எவ்வளவு தூரம் (பேகோஷா) வெளியில் வந்து திரையன்றி யிருக்க முடியுமோ அதுவரை தன் வெட்கம், நாணம் இவையனைத்தையும் போக்கிவிடுவதுதான் அவர்களுக்கு மேலாகக் காணப்படுகின்றது. அல்லாஹுதஆலா அவர்களின் பாவங்களைப் பொறுத்து அவர்கள் நேரான பாதையைக் கடைப் பிடிக்குமாறு கிருபை பாலிப்பானாகவும்.

மிஸர் தேசத்திலுள்ள சாதாரண ஜனங்களில் அநேகரின் இஸ்லாமிய அனுஷ்டானம் மிக்க தாழ்ந்த நிலைமையிலிருப்பதால் அவர்களது ஒழுக்கங்களிற் பல (குப்பார்) இதர மதஸ்தர்களின் பழக்க வழக்கம் இவைகட்கு ஒத்ததாகவே காணப்படுகின்றன. அக்குப்பார்களின் துர்ப்பழக்க வழக்கங்கள் அ[...] மிஸர்வாசிகளிடம் இதுகாறும் காணப்ப[...]டே வருகின்றன. உதாரணமாக கையில் ப[...]சைக் குத்திக்கொள்வது தலையில் விதவி[...]மான 'சிண்டு' வைத்து (சோட்டி) பின்ன[...] போட்டுக்கொள்வது. பெண்களைத் திரை[...]யன்றி வெளியில் அழைத்துச் செல்வது மு[...]லியன அவர்களில் மலிந்து கிடப்பதை இ[...] பொழுதும் கண்கூடாகப் பார்க்கலாம். 'மக்[...] ஷரீபி'ல் 'இஹ்ராம்' கட்டி யிருக்குங்கா[...] அவர்களது தலை முகம் இவைகள் திறந்[...] காணப்படுவதால் அவர்களது இக்கோலங்[...]ளெல்லாம் தெற்றென நமது பார்வைக்கு[...] தென்படுகின்றன. ஹஜ்ஜுக்காகவரும் அ[...]

[...]களது பெண்கள் தவாப் சுற்றிவரும்போது காட்டும் பலமும் பிற ஆண்களை அலக்ஷியஞ் செய்து அவர்கள் நடந்துகொள்வதும், துப்பட்டியின்றி அவர்கள் செல்வதும் கவனிக்கக்கூடிய ஒரு விஷயமாகவே ஆய்விடுகின்றது. அவர்கள் சற்றும் நாணமற்று ஆண்பிள்ளைகளைப் பார்த்துக்கொண்டே தவாப் செய்வது தான் விந்தைக்குரியதாய்க் காணப்படுகின்றது. இதோடு நில்லாமல் ஆண்பிள்ளைகளைத் தள்ளிக்கொண்டுபோய் "ஹஜருல் அஸ்வதை" முத்தியிடுகின்றார்கள். கடை வீதிகளுக்கு துப்பட்டியன்றி பகிரங்கமாகச் சென்று வியாபாரம் செய்தும் வருகின்றார்கள். அவர்களின் புருஷர்களும் அவர்கள் பின் செல்கின்றார்கள். சுருங்கக்கூறுமிடத்து மக்கமா நகரின்கண் துப்பட்டி போர்த்தாமல் இவ்விதக் கோலத்தோடு காணப்படும் பெண்களெல்லாம் மிஸர் தேச வாசிகளேயாவர். ஆனல் இவ்வித தீய ஒழுக்கங்களெல்லாம் அவர்கட்கு புதியனவன்று. பல நூற்றாண்டுகளுக்கு முன்னிருந்தே அவர்களில் இக்கெட்ட அனுஷ்டானங்கள் நடைபெற்றுக்கொண்டே வருகின்றன. இதற்கு மேற்கோளாக அல்லாமா, ஐனி ஷரஹ்புகாரியில் கூறியிருப்பதாவது:—

நூதன அனுஷ்டானங்களுடன் புதிய பாதையிற் செல்லும் விஷயமாக "இவர்கள் நாயகம் (ஸல்.) அவர்கள் காலத்தில் இவ்வித மார்க்க முரண்கொண்ட காரியங்களைப் புரிந்துவருவார்களாயின் பனூ இஸ்ராயீல் கூட்டத்திலுள்ள பெண்களை விலக்கியது போல் இவர்களையும் பள்ளிவாசலுக்கு வரவேண்டாமென்று நாயகம் (ஸல்.) அவர்கள் கட்டளை பிறப்பித்திருப்பார்க" ளென்று தன் காலத்திலுள்ள பெண்களைப் பார்த்துச் சொல்லிச் சென்ற ஹஜ்ரத் ஆயிஷா சித்தீகா (ரலி) அவர்கள் இக்காலத்திலிருந்து இதுபொழுது ஏற்பட்டிருக்கும் பலவித நூதனக் கொள்கைகளையும் கபடு, சூது முதலிய துர்ச்செய்கைகளையும் காண்பார்களாயின் அப்பெண்கள் விஷயமாக என்ன கூறுவார்களென்று நினைக்கின்றீர்கள். அதிலும் முக்கியமாக மிஸர் தேசப் பெண்களில் மலிந்து கிடக்கும் மார்க்க முரண்கொண்ட காரியம், செயல் இவைகளைக் கண்டு மனம் சகியாதவர்களாய் எவ்வளவுதூரம் அவர்களைக் கண்டிப்பார்களென்று நினைக்கின்றீர்கள்.

மிஸரில் அநேக விதமான மார்க்கவிரோத வழி கெட்ட கொள்கைகள் மலிந்து கிடக்கின்றன. அவைகளிற் சிலவற்றை கீழே குறிப்பிடுகின்றேன்.

(1) அத்தேசப் பெண்கள் விலையுயர்ந்த முத்து இரத்தினுதி இவைகளைக் கொண்டு இழைக்கப்பட்டதும் அருகுகளில் ஜரிகை வேலை செய்யப்பட்டதுமான உயர்ந்த பலவிதமான பட்டுகளை உடுத்திக்கொண்டும், கை அகலமானதும் நீண்டு பூமியில் தொங்கிக்கொண்டிருக்கும்படியான பட்டுச் சட்டைகளையும் அணிந்து கொண்டும், வெள்ளி தங்கம் இவைகளின் கம்பியால் பின்னப்பட்ட கைக்குட்டைகளை வைத்துக்கொண்டு மிருப்பார்கள். அவர்கள் அணிந்திருக்கும் சட்டைகளிலொன்றினுல் மூன்றுக்கதிகமான சட்டைகள் தைத்துவிடலாம்.

(2) அப்பெண்கள் பெருமை தரத்தக்க புடவைகளை அணிந்து வாசனை தூபம் முதலிய சுகந்தங்களைப் பூசிக்கொண்டு தன் அழகை வெளியாக்கினவர்களாக முகத்தைத் திறந்துகொண்டு ஆண்பிள்ளைகளுக்கு மத்தியில் அலைந்து திரிவார்கள்.

(3) கைஅகலமானதும் நீண்டு தொங்கும்படியானதுமான சட்டையுடன் அழகு பொருந்திய வாகனத்தின் மீது ஆரோகணித்து ஊரைச் சுற்றிவருவார்கள்.

(4) அப்பெண்கள் ஆண் பிள்ளைகளுடன் சேர்ந்து படகுகளில் உட்கார்ந்து குடிவகைகளை அருந்தி இனிமையான பாடல்களை பாடிக்கொண்டு மிஸ்ரிலுள்ள நீல நதியைச் சுற்றி வருவார்கள்.

(5) ஆண்பிள்ளைகள் மீது மிகைத்து அவர்களை தங்களுக்கு அடிமையாக்கி வைத்துக்கொண்டு அவர்கள்பால் அதிகாரமும் செலுத்துகின்றார்கள்.

(6) மற்றப் பெண்களுக்கிடையில் மார்க்க விரோதமான செயல்களை உண்டுபண்ணும்படியானவும், ஆண் பெண் இருபாலாருக்கிடையில் சம்பந்தத்தை உண்டாக்கி வைக்கக் கூடியவுமான செயல்களையுடைய சில பெண்களும் அவர்களில் இருக்கின்றார்கள்.

(7) கெட்ட வேலைகளுக்கென்றே ஆயுத்தமாய் உடுப்புத் தரித்துக்கொண்டு சில பெண்கள் அங்கு காணப்படுகின்றார்கள்.

(8) ஆண் பிள்ளைகளை வேட்டையாடித்திரிபவர்களும் வீடுகளில் நுழைந்து கொள்ளை அடிப்பவர்களும் பில்லி சூனியம் செய்பவர்களும் கடைவீதிகளில் ஆண்களுடன் நேர்முகமாக கொடுக்கல் வாங்கல் செய்யும் சிலரும் அப்பெண்களில் காணப்படுகிறார்கள்.

(9) பெண்களிடம் பிறபுருஷர்களை அழைத்து வந்து விடுபவர்களும், தப்பு அடிப்பவர்களும் பலவித இனிமையான பாடல்களைப் பாடி கூலி பெறுபவர்களும் அப்பெண்களில் காணப் படுகின்றார்கள்.

(10) புருஷன் பெண்சாதி இருவருக்கிடையில் ஒரு காரியத்தைக் கொண்டு பிளவு படுத்தியும் அநேக கெடுதிகளை விளைவித்துக் கொண்டிருக்கும் படியானவுமான பெண்களும் அங்கு காணப்படுகின்றார்கள்.

இக்காலத்து பெண்களின் தீமைகளில் ஆயிரத்தில் ஒருபங்குகூட யில்லாத தன் காலத்தின் பெண்கள் விஷயமாக நாயகம் (ஸல்) அவர்கள் கடுமையாகக் கண்டிப்பார்களென்று ஹஸ்ரத் ஆயிஷா சித்தீகா (ரலி.) அவர்கள் சொல்லி யிருப்பதைக்கொண்டு வழிகேட்டிலிருக்கும் இக்காலத்துப் பெண்கள் விஷயமாய் என்ன கூறுவார்களென்று நினைக்கின்றீர்கள்.

## துருக்கிப் பெண்களின் கோஷா

துருக்கி தேசத்திலுள்ள ஐவாய் மிருகங்களைப் போலொத்த பாமரர்கள் தங்கள் பெண்களை கோஷா விஷயமாய் எவ்விதம் நடத்துகின்றார்களென்பது நன்கு புலனாகிறதில்லை. ஆனால் அவர்களிலுள்ள சாமானியர்கள் கோஷா விஷயமாக அளவற்ற பேணுதலுடையவர்களாகவே காணப்படுகின்றார்கள். தங்கள் இருப்பிடங்களில் போதிய அளவு கோஷா முறையை அனுசரித்து நடந்து வருபவர்களுங்கூட பிரயாணஞ் செல்லுங்கால் அம்முறையைப் போதிய அளவு கவனியாதிருப்பது சகஜமாகவே யிருந்து வருகின்றது ஆனால் துருக்கி தேசத்திலுள்ள சங்கைவான்களும், ஆண்டவனுக்குப் பயந்து நடந்து வரும் சாலிஹீன்களும் ஹஜ்ஜு செய்வதற்காக தன் மனைவி மார்களை அழைத்துவருங்கால் பிரயாணஞ் செய்வதின் அலங்கோலம் ஏற்பட்டிருப்பதுடன் அவர்கள் திரேகத்தில் சற்றும் வெளியாகாமல் ஒழுங்கான முறையில் (பர்தா) துப்பட்டி அணிந்து வரும்படி ஏற்பாடு செய்கின்றார்கள். பகல் நேரங்களில் வெளியில் அழைத்து வருவதே கிடையாது தவாப் செய்வதுபோலொத்த முக்கிய காரியங்களுக்காக ஹறம்ஷரீப் முதலிய இடங்களுக்கு அழைத்து வருங்கால், வாலிபப் பெண்ணா, வயது முதிர்ந்ததா, சிவப்பு நிறமுடையதா, கருத்தமேனியுடையதாவென்று பார்ப்பதற்கு அப்பெண்களின் ரூபம் அறவே தெரியாமலிருக்கும்படி போர்த்தி அழைத்து வருவார்கள். ஆதலால் துருக்கி தேசத்தில் கோஷாமுறைக்கு ஒழுங்கான கட்டுப்பாடு இல்லை என்று கூறுவது உண்மைக்கு மாற்றமானதாகும் (ஆனால் தற்போது சில புது நாகரீக சீர்திருத்தக் காரர்கள் அங்கு கிளம்பி அத்தேசத்தைச் சீர் திருத்துவதாக செய்துவரும் ஏற்பாடுகளைக்கொண்டு எவ்வித அல்லல்கட்கு அத்தேசம் அகப்பட்டுச் சீர்குலைந்து நிற்கிறதென்பது மறைவானதன்று).

## அரப்தேசத்தின் கோஷா

அரப் தேசத்திலுள்ள (பதவி) காட்டுமிராண்டிகளான மடையர்கள் தங்கள் பெண்களை வீடடங்கி யிருக்கும்படிச் செய்யாமல் வெளியில் திரியும்படி விட்டுவிடுவதை நாம் பொருட் படுத்தக்கூடாது. அத்தேசத்தின் பட்டணம் சிற்றூர் முதலிய இடங்களில் வசிக்கும் சாமானியர்களின் பெண்களும் வெளியில் வராமல் வீடடங்கியே யிருந்து வருகின்றனர். தங்கள் ரூபத்தையும் சத்தத்தையும் எந்த பிற ஆண்களுக்கும் காண்பிப்பதே கிடையாது. அத்தேசத்தில் வெளியில் புறப்பட்டு வருவதாக நமது கண்களுக்குப் புலப்படுவது அவர்களின் வேலைக்காரப்பெண்களும் ஏழைகளுமே யாகும் அவர்களும் தங்கள் திரேகம் சற்றும் வெளியாகாமல் துப்பட்டி போர்த்துக்கொண்டு நடந்து செல்வதற்குப் பாதை தெரிவதற்காக இருகண்கட்கு நேரில் அத்துப்பட்டிகளில் இரண்டு துவாரங்கள் ஏற்படுத்தி அதன்மூலம் பார்த்துக்கொண்டு முக்கியமான வேலைகளுக்காக வெளியில் சென்று வருவார்கள். இதரர்கள் எவ்வகையிலும் அவர்களைப் பார்க்க முடியாது தவிர காட்டுப் பிரதேசங்களில் வசிக்கும் சங்கைவான்களிற் சிலரும் தங்கள் மனைவிகளை கஃபத்துல்லா ஷரீபுக்கு அழைத்து வரும்போது அவர்களை பெரிய



துப்பட்டிகள் அணியும்படி செய்து குருடர்களை அழைத்துச் செல்வதுபோல் அவர்களது கைகளைப் பிடித்து அழைத்துச் செல்கின்றார்கள். இதுதான் அரப்தேசத்தின் கோஷா, பர்தா முறையாகும்.

முஸ்லிம் நேயர்காள்!

இதுவரை முபஸ்ஸிரீன், முஹத்திதீன்களாகிய விரித்துரை ஆசிரியர்களாலும், புக்ஹாக்களென்னும் மார்க்கத் தீர்ப்பாளர்களாலும் கோஷா (பெண்கள் வீடடங்கியிருத்தல்) பர்தா (துப்பட்டி போர்த்துக்கொண்டுவெளியிற் செல்லல்) விஷயமாய் குர்ஆன் ஹதீதுகளின் தக்க மேற்கோள்களுடன் சவிஸ்தாரமாய் விளக்கிக் கூறப்பட்டிருப்பது நேயர்களுக்கு மறைவானதன்று. ஆனால் பல ஆதாரத்தோடு விஸ்தாரமாய் நீண்ட வியாசத்தில் கூறப்பட்டிருப்பதால் சாமானியர்களிலனேகருக்கு விஷயம் நல்ல விதமாய்ப் புலப்படமாட்டாததலின் சுருக்கமாகக் கருத்தை மட்டும் தெரிந்துகொள்ளவேண்டுமென்பதைக் கருதி மேலே விஸ்தாரமாய்க் கூறப்பட்டதன் சுருக்கத்தை மீண்டும் அட்டவணை போல் இதனடியில் குறிப்பிடுகின்றேன் (இதை உணர்ந்து கோஷா, பர்தா இவ்விரண்டிற்கிடையில் வித்தியாசம் புரியாமல் பர்தா முறையானது முஸ்லிம்களுக்கிடையில் வந்து நுழைந்துகொண்ட கெட்ட வழக்கமென்று கூறி அதை அகற்றிவிட முயற்சித்து வருவதாகக் குதர்க்க வாதம் புரிந்து வரும் கோஷ்டியின் சந்தேகம் ஒருவாறு நீங்கி அவ்வாதங்களை விட்டொழித்து நேரான பாதையிற் செல்லுவார்களென்று எதிர்பார்க்கின்றோம்)

## அட்டவணை

(1) பெண்கள் வெளியில் புறப்படாமல் வீடடங்கி யிருக்கவேண்டும்.

(2) அவர்களை கடைத்தெரு முதலிய வெளி இடங்களுக்கு அனுப்புகிறவன் உரோஷமற்றவனாகும்.

(3) கோஷா முறையை அனுஷ்டிக்குமாறு இடப்பெற்ற கட்டளையானது நாயகம் (ஸல்.) அவர்களது நம்பிராட்டிமார்களுக்கு மட்டுமின்றி ஏனைய முஸ்லிம் பெண்மணிகளும் அனுஷ்டிக்கும்படி இடப்பெற்ற கட்டளையாகும்.

(4) பரமாதர்களைப் பார்ப்பது கொண்டு பித்னா, பஸாதும் கெடுதியான வேலைக்குக்காரணமும் ஏற்படுவதால் அவை மார்க்கத்தில் விலக்கப்பட்டதாகவே யிருக்கின்றது.

(5) பெண்கள் கண் குருடான ஆண்பிள்ளைகளின் முன்னிலையில் செல்வதை நாயகம் (ஸல்.) அவர்கள் விலக்கியிருக்கின்றார்கள்.

(6) தவிர்க்கமுடியாத சந்தர்ப்பம் ஏற்படின் துப்பட்டி போர்த்துக்கொண்டு பெண்கள் வெளியிற் சென்றுவரலாம்.

(7) வெளியிற் புறப்பட நேருங்கால் தன் அழகைக் காட்டிக்கொள்ளாமல் அழுக்கானதும் பழையதுமான ஆடைகளை அணிந்து துப்பட்டியைக்கொண்டு நல்ல விதமாகத் தன்னைப் போர்த்துக்கொண்டு அவசியத்திற்காகமட்டும் செல்லவேண்டும்.

(8) நல்லவிதமான ஆடைகளை அணிந்து வாசனைத் திரவியங்கள் பூசி தன் அழகை வெளியாக்கிக்கொண்டு திரியும் பெண்கள் கெட்ட நடத்தையுடையவர்களென தீர்ப்பளிக்கப்பட்டிருக்கின்றது.

(9) பெண்கள் தன் அழகு, முகம், தலைமயிர், கால், கை மற்ற சகல உருப்புக்களையும் பிற ஆண்களிடம் அவசியமின்றி காண்பிக்கலாகாது.

(10) பெண்கள் தங்களது நகைகளின் சத்தங்களை கேட்கும்படி செய்வது கூடாது. அவ்வித நகைகளை அணியும்படி செய்கின்ற புருஷனுடைய துஆவும் ஆண்டவனது சன்னிதானத்தில் ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லை.

(11) நாயகம் (ஸல்.) அவர்கள் காலத்தில் பெண்கள் தங்களை அடையாளந் தெரியாமல் துப்பட்டி போர்த்துக்கொண்டுஇராக்காலங்களில் தொழுகைக்காக பள்ளிவாசலுக்குவந்து கொண்டிருந்தார்கள். பெண்களெல்லாம்முதலிலே போய் விடவேண்டுமென்பதைக் கருதி நாயகம் (ஸல்.) அவர்கள் தொழுகையை விட்டுத் திரும்பி சற்றுநேரம் உட்கார்ந்து பிறகு செல்வார்கள். இவ்வித ஏற்பாட்டுடன் தான் பெண்கள் பள்ளிக்குவர அனுமதியளிக்கப் பட்டிருந்தார்கள். அவர்களில் யாராகிலும் வாசனை பூசிக்கொண்டு வந்தால் நாயகம் (ஸல்.) அவர்கள் அப்பெண்களை கடுமையாகக் கண்டிப்பார்கள்.

(12) நாயகம் (ஸல்) அவர்கள் காலத்திற்குப் பின் எது சமயம் ஆண் பெண்களுக்கிடையில் கெட்ட எண்ணங்களும் புதிய கொள்கைகளும் ஏற்பட்டதோ அது சமயம் ஹஜ்ரத் உமர் (ரலி.) அவர்கள் பெண்கள் பள்

ளிக்கு வரக் கூடாதென்று கட்டளை பிறப்பித்து தடுத்துவிட்டார்கள். இப்னு உமர் (ரலி.) அவர்கள் வெள்ளிக்கிழமை (ஜும்ஆக்) களில்பெண்களை பொடிக் கற்களைக்கொண்டு அடித்து விரட்டி யிருக்கின்றார்கள். ஹஸ்ரத் பீபீ ஆயிஷா சித்தீகா (ரலி.) அவர்களும் இதை திருப்தி செய்துகொண்டு இக்காலத்துப் பெண்களது ஒழுக்கத்தை நாயகம் (ஸல்.) அவர்கள் பார்ப்பார்களாயின் கட்டாயம் அவர்கள் பள்ளிக்கு வரக்கூடா தென்று விலக்கி யிருப்பார்களென்று சொன்னார்கள்,

(13) பெரியார்களான சஹாபாக்கள் காலத்திலேயே "என்னுடைய இப்பள்ளியிலும் மற்றெந்தப் பள்ளிவாசல்களிலும் பெண்கள் தொழுதுகொள்வதைப் பார்க்கினும் தங்கள் வீட்டிற்குள்ளிருக்கும் அறைகளிலேயே தொழுதுகொள்ளுவது மேலானதாகு'மென நாயகம் (ஸல்.) அவர்கள் கூறியிருக்கின்றார்கள்.

(14) "நீங்கள் உங்கள் வீடுகளிலேயே தொழுகையை நிறைவேற்றி வருவீர்களாயின் உங்களுக்கு (பீஸபீல்) யுத்தகளத்திற்குச் சென்று ஆண்டவனது பாதையில் யுத்தம் புரிவதன் (தவாப்) பதவி கிடைக்கு"மென நாயகம்(ஸல்.) அவர்கள்கூறியிருக்கின்றார்கள்.

(15) பெண்களைப் பார்ப்பது கொண்டு பித்னா, பஸாது எற்படும் என்னும்உறுதியோ சந்தேகமோ ஏற்படின் அதுபொழுது அவர்களைப் பார்ப்பது (ஹராம்) விலக்கானதாகும்.

(16) கெட்ட பார்வை பார்ப்பவன் கண்ணில் (கியாமத்) இறுதித் தீர்ப்புநாளில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றப்படும்; அவன் சுவர்க்கத்தின் வாடையைக்கூட நுகரமாட்டான்.

(17) பெண்கள் கண்குருடான ஆண்பிள்ளையிடம் குர்ஆன் ஷரீபைக் கற்றுக்கொள்வதைப் பார்க்கினும்,பெண்பிள்ளையிடம் கற்றுக் கொள்வது மேலாகும்.

(18) பெண்கள் யாரையும் அழைப்பதாயின் சத்தம் கொடாமல் கைதட்டியே அழைக்கவேண்டும்.

(19) வாலிபப் பெண்களாயினும் சரியே, வயது சென்றவர்களாயினுஞ் சரியே தங்கள் வீடுகளில்தான் தொழவேண்டும் ஜமாஅத்துத் தொழுகைக்காகப் பள்ளிவாசலுக்குச் செல்லலாகாதென மார்க்கத் தீர்ப்பளிக்கப்பட்டுப் போயிற்று. ஆனால் பெண்கள் பள்ளிக்கு வரலாமென அனுமதி யளிக்கப்பட்டிருந்ததானது ஸஹாபாக்களுடைய காலத்தோடு நிறுத்தப்பட்டு அவ்வுத்தரவும் ரத்து செய்யப்பட்டுப் போயிற்று.

(20) மிஸர் தேசப் பெண்களின் கெடுதி அவர்களது கெட்ட நடப்பும், துருக்கி அரப் தேசங்களிலுள்ள பொது ஜனங்கள் சங்கைவான்கள் கோஷா பர்தா விஷயமாய் நடந்துகொள்ளும் முறைமையும் கூறப்பட்டிருப்பது காண்க.

அன்புற்ற சகோதரர்காள்!

மார்க்கப் புரட்டர்களும் கோஷா பர்தா முறையை ஒழித்துவிடப் பிரசாரஞ் செய்து வருபவர்களும், கோஷா முறையானது குர்ஆன், ஹதீது இவைகளின் ஆதாரங்களைக் கொண்டு ஏற்படவில்லை ; இந்தியர்கள் தானாகவே இவ்வித கடுஞ்சிறைச்சாலையை ஏற்படுத்திக்கொண்டார்களென்று பிரசாரஞ்செய்து முஸ்லிம் சகோதரர்களை ஏமாற்றி வரும் இக்காலத்தில், குர்ஆன் ஷரீப் சிறப்புற்ற ஹதீது புக்ஹாக்களின் சொற்களாகிய மார்க்கத் தீர்ப்பு முதலியவைகளின் தக்க ஆதாரத்தோடு இப்பர்தா கோஷா முறையானது மார்க்கத்திலுள்ளதுதான் என எடுத்துக் காண்பித்திருக்கின்றேன். நேயர்கள் உண்மையை உணர்ந்து வழி கேடர்களின் மார்க்க முரண் கொண்ட கொள்கையைத் தவிர்த்து சத்தியத்தைக் கடைபிடித்து நேரான பாதையிற் செல்வார்களாக. (தொடரும்.)

---

"முஸல்மான்" ஆபீஸ் புத்தகசாலை

எமது ஆபீஸிலுள்ள புத்தகங்கள் யாவும் தற்காலத்திற்கு இன்றியமையாதனவாய் புதிய முறையில் இயற்றப்பெற்று விற்பனைக்குத் தயாராக இருக்கின்றது அதைப்பற்றிய முழு விபரங்களும் கேட்லாக்கில் காணலாம் அரையணா ஸ்டாம்பு அனுப்புவோர்க்கு கேட்லாக் அனுப்பப்படும்.

மானேஜர், முஸல்மான் ஆபீஸ், தேன்காசி.

# லைலத்துல் கத்ர்.

"நிச்சயமாக நாம் அதை (குர்ஆன் ஷரீபை) பெருமையுள்ள இரவில் இறக்கினோம். மேலும் பெருமையான இரவு இன்னதென்பதை உமக்கு அறிவித்தது யாது? பெருமை பொருந்திய (அவ்) இரவானது ஆயிரம் மாதங்களைக் காட்டினும் மேலானதாகும் அந்த இரவில் மலக்குகளும் றூஹும் தங்களுடைய ரப்பின் கட்டளைப்படி ஒவ்வொரு காரியத்தைக் கொண்டும் இறங்குவார்கள். ஈடேற்றம்; அது வைகறை உதயமாகும்வரை இருக்கும்"—குர்ஆன்.

சர்வ சக்தியும் வல்லமையும் பொருந்திய ஏக சக்ரவர்த்தியான அல்லாஹ் சுப்ஹான ஹுவதஆலா தனது திருமறையில் 97-வது அத்தியாயத்தின்மூலம் மேன்மை பொருந்திய அவனது வேதமான குர்ஆன் ஷரீப் முதல் முதலாக இறக்கப்பெற்ற இரவைப்பற்றியும், அதன் மகிமையைப்பற்றியும் கூறியிருக்கின்றான். இத்தகைய சிறப்புத் தங்கிய இரவானது ரமலான் மாதத்திலேயே இருக்கிறது என்பதை 2—185-வது வசனத்திலிருந்து தெரிந்து கொள்கிறோம். ஒரு நாள் நபிகள் திலகம் ரசூல் (ஸல்.) அவர்கள் பனூ இஸ்ராயீல் கூட்டத்தாரின் சமாசாரங்களை பெரியார்களாய சஹாபாக்களின் மத்தியில் சொல்லிக்கொண்டு வரும்பொழுது அவர்களில் காலஞ் சென்றுபோன ஷம்ஊன் அல்லது ஷம்ஊன் என்னும் பெயர் பெற்ற ஜாஹித் (ஆண்டவனது பாதையில் முழுமனதுடன் வணங்குபவர்) ஒருவரின் நடவடிக்கைகளையும் மேன்மைகளையும் எடுத்துச் சொல்லுங்கால் அவர் ஆயிரம் வருஷம் வரை வணங்கியிருப்பதாயும், ஒவ்வொருநாளும் நோன்பு நோற்று வந்திருப்பதாயும், காபிர்களுடன் யுத்தம் புரிந்திருப்பதாயும், இரவெல்லாம் நின்று வணங்கி அவர் பாக்கியசாலியாய் விட்டதாயும் தெரிவித்தார்கள். இதைக் கேட்ட சஹாபாக்கள் "அல்லாஹ் வுடைய ரஸூலே! நாங்கள் எவ்வாறு அவரைப்போல் பாக்கியசாலியாவோம்? எங்களில் பெரும்பாலோரின் வயதானது 60, 70க்கு மத்தியிலிருக்கின்றது. அதிலும் பகுதி தூக்கத்திலும், சில பகுதி வயிற்றுக்கு இரை தேடுவதிலும், மற்ற தேவைகளிலும் கழிந்துவிடுவதுமன்றி, வியாதி சோம்பல் இவைகளிலும் அவ்வபதிற் சில வீணாய்விடுகின்றது. இத்துடன் ஆண்டவனை வணங்கி அவரைப் போல் நாங்களும் பாக்கியசாலி யாவதற்கு எங்களுக்கு நேரம் எங்குளது" என மனம் வருந்தினார்கள். இதைக் கேட்டு நயகம்(ஸல்.) அவர்கள்முகம்வாடி வருந்திக் கலங்கினார்கள். எம்பெருமானார் நபிகள் திலகம் (ஸல்.) அவர்கள் பேரில் அல்லாஹ் தஆலா கொண்டுள்ள அளவுகடந்த அன்பினால் அவர்களின் கவலையை நீக்குவதற்காகவே இந்த ஸூராவை இறக்கி அதில் "உங்களது உம்மத்துகளின் வாணாட்கள் சொற்பமா யிருந்தபோதிலும் உங்களுக்கு நான் ஒரு சிறப்புற்ற உயரிய இரவைக் கொடுத்திருக்கின்றேன். அந்த இரவில் வணங்குவது ஆயிரம் மாதம் வணங்குவதைப் பார்க்கினும் மேலானதாகும்" எனக் கூறி யிருக்கின்றான். அதாவது அந்த ஒரு இரவில் நித்திரையை ஒழித்து வணங்குவதானது ஆயிரம் மாதங்கள் வணங்குவதைப் பார்க்கினும் மேலானதாகும் என்பதே. இதைக் கேட்டு எம்பெருமானார் (ஸல்.) அவர்கள் சந்தோஷமடைந்து அவ்விரவில் ஆண்டவனுக்கு உகந்த நற்காரியங்களைச் செய்து 1000 மாதம் வணங்கி பெறும் பாக்கியத்தைவிட மேலான பதவிகளைப் பெற்றுக்கொள்ளும்படி தங்களின் உம்மத்துகளாகிய நம் அனைவர்க்கும் கட்டளை பிறப்பித் திருக்கின்றார்கள். அப் புண்ணிய இரவுக்குத்தான் லைலத்துல்கத்ர்" (சங்கை கீர்த்தி மேன்மை பெற்ற இரவு) எனக் கூறப்படுகின்றது.

இந்தச் சிறந்த இரவைப் பலன்படுத்திக் கொள்ளத் தவசிரேஷ்டர் முன்னிருந்தே தக்க ஏற்பாடு செய்வர். இவ் விரவானது ரம்லான் மாதத்தில் தான் என்பதை நாம்

தெரிந்துகொண்டாலும் அது எத்தினத்தைய இரவு என்பதை வெளிப்படையாக் கூறப்படவில்லை. ஆதலால் பெரியார்கள் அம்மாதம் முழுவதிலுமே நித்திரையை நீக்கி வணங்குகின்றனர். எனினும் இவ்வாறு செய்வது எல்லா மக்களாலும் இயலாதன்றோ? ஆதலால், அப் பெரியார்களிற் பலர் தங்கள் அநுபவத்திலிருந்து இவ் விரவானது 20-தேதிக்குமேலுள்ள ஒற்றைப்படையான 21, 23, 25, 27, 29 ம் தேதிகளிலொன்றில் வருகிறதெனக் கூறி யிருக்கிறார்களாயினும் சில பெரியார்கள் அதை 27-ம் தேதி இரவென்று குறிப்பிட்டும் கூறி யிருக்கின்றார்கள்.

அவ் விரவில் இறைவனது அருளும் கருணையும் நமக்கு விசேஷமாக உண்டாவதால் மனித உணர்ச்சியிலும் அந்த இரவின் நிலைமையானது இதர இரவுகளின் நிலைமையைப் பார்க்கினும் மாறுபட்டிருக்கின்றது. அநுபவ மடைந்த பெரியார்கள் அவ்விரவின் விசேஷங்களிற் சிலவற்றை விளக்கியிருக்கிறார்கள். அது வருமாறு:—

"அந்த இரவில் இறைவனடியார்கட்கு அவனருள் நிரம்ப உண்டாகின்றது. அஃது ஒரு கண்ணிய மிக்க புண்ணிய இரவாய்ப் புலப்படுகின்றது. ஆண்டவனது அருள் அரும்பும்போது அடியார்களி னுள்ளத்தில் ஒருவகை ரம்மிய முண்டாகி, குதூகலம் ஏற்படுகின்றது. வானத்திலும் ஒருவகை மந்த மாருதந் தோன்றி இனிய தென்றல் காற்று வீசுகின்றது. அவ்வேளையில் ஆண்டவனது வணக்கத்தி லீடுபட்டிருப்பவர்கட்கு ஒருவித உற்சாகமும் கிளர்ச்சியும் உண்டாகின்றன. இவ் அண்டத்திலுள்ளகோடானுகோடிப் பொருட்களும் பரிசுத்தநிலை அடைந்திருப்பதாகத் தென்படும். பக்தர்களின் உள்ளத்திலுள்ள எல்லாக் கெட்ட எண்ணங்களும் மாறி அழிந்துபோகின்றன"

இவ்வித நிலையை அறிந்த இறைவனது நல்லடியார்கள் 'மனம் ஆர்வங்கொண்டு தமது மானிடத்தன்மையை மறந்து பரவசமாகி இறைவனது வணக்கத்தில் ஈடுபட்டு அவர்கள் தங்களுக்கு வேண்டுவனவற்றை விண்ணப்பிக்கின்றனர். இறைவனும் தனது பெருங் கருணையால் அப்பிரார்த்தனைகளை ஏற்றுக் கொள்கின்றான். பிழை பொறுக்கத் தேடுபவர் யார்? சரீர ஆயுள் ஐஸ்வரியம் பெருக வேண்டுமெனக் கேட்பவர்யார்? சரீர நலனைக் கோரிக்கொள்பவர் யார்? என்று அப் புனிதமான இரவின் பின்னேரத்தில் ஆண்டவன் அழைக்கின்றானென்றும், அதுபொழுது அவனிடம் செய்துகொள்ளும் வேண்டுகோளை நிறைவேற்றிக் கொடுக்க அவன் தய்யாராகயிருப்பதாகவும் நாயகம்(ஸல்.) அவர்கள் கூறியிருக்கின்றார்கள். கிடைப்பதற்கு அரிதான இச்சந்தர்ப்பத்தை அடைவதற்காகவே புண்ணியவான்கள் மாதக் கணக்காகவும், நாட்கணக்காகவும் நாயனைத் துதிக்கின்றனர். ஆதலால் அப்புண்ணிய மிக்க இரவில் நாம் விழித்திருந்து ஆண்டவனது சந்நிதானத்தில் ஒப்புக்கொள்ளப்படக்கூடிய நல்ல செயல்களைச் செய்து, அவனிடம் பாப மன்னிப்பையும் ஆயுள் விருத்தியையும் ஐஸ்வரியப் பெருக்கையும், ஈமானையும் கொடுக்கும்படி கேட்கவேண்டும். ஏனெனில் ஆண்டவன் அவ்விரவில் அவைகளை தன்னிடம் கேட்கும்படி சொல்லியும் காண்பித்திருக்கின்றான். இப்படிப்பட்ட அருளைப் பெறுவதற்கு நாம் ஒவ்வொருவரும் முயற்சித்தல் வேண்டும்.

இதற்காகப் பெரியார்கள் பலவிதமாக வணங்கியிருக்கின்றார்கள். ஒவ்வொருவரும் தத்தம் அநுபவத்தில் சித்தியடைந்த முறைகளையே கூறியிருக்கின்றனர்.

சிலர் அவ்விரவு முழுதும் 'நபில், தொழுகையை நிறைவேற்றியிருந்திருக்கின்றனர். சிலர் திக்ரு, செய்வதிலேயே ஈடுபட்டிருக்கின்றனர். சிலர் 'குர் ஆன் ஷரீப், ஓதிவந்திருக்கின்றனர். சிலர் 'ஸலவாத்து, ஓதிவந்திருக்கின்றனர். இவைகளில் எது சிறந்தது, எது தாழ்ந்தது யென்பதை வகுத்துக்கூறமுடியா. இப்பிரார்த்தனை முறைகளில் எதில் யார் யாருக்கு மன ஓர்மையும் தெய்வ பக்தியும் இன்பமும் அதிகமாக ஏற்படுகிறதோ, அதுவே அவர்களுக்குச் சிறந்தது. ஆனால் அன்றிரவில் நடத்த வேண்டிய தொழுகைகளிற் சிலவற்றை கீழே குறிப்பிடுகின்றோம். அஃதாவது யாராகிலு மொருவன் "லைலத்துல் கத்ர்" இரவில் இரண்டு ரக்கத்து தொழுவதாக நிய்யத்து செய்து தக்பீர் கட்டி ஸூரத்துல் பாத்திஹா (அல்ஹம்துஸூரா)வுக்குப் பின் 'குல்ஹுவல்லாஹு அஹத், என்னும் ஸூரயே இக்லாஸை ஏழு விடுத்தும் ஓதி அந்த ரக்கஅத்தை முடித்து மறு ரக்கஅத்திலும் அதேவிதமா ஓதி தொழுகையை முடித்து சலாம் கொடுத்து "அஸ்தஃபிருல்லாஹ வ அதூபு இலைஹி" (நான் அல்லாஹ் தஆலாயிடத்தில் பாவ மன்னிப்புத் தேடுகின்றேன். இன்னும் இனி பாவங்கள் செய்வதைவிட்டும் "தவ்பா" செய்கின்றேன் என 70 முறை ஓதினால் தொழுத இடத்தைவிட்டு அவன் எழுந்திருப்பதற்குள், அவனுடையவும் அவனது தாய் தகப்பனுடையவும் பாவங்கள் யாவற்றையும் அல்லாஹ் தஆலா மன்னித்து சுவர்க்கத்தில் அவனுக்காக விருக்ஷங்களை உண்டாக்கவும் மாளிகைகளைக்கட்டவும் மலக்குகளை அனுப்புகின்றானென்றும் நாயகம் (ஸல்.) அவர்கள் திருவாய் மலர்ந்தருளியதாக அலீ (ரலி.) அவர்கள் கூறுகின்றார்கள்.

தவிர "அவ்விரவு முடிந்ததும் வானத்திற்குச் திரும்பிச் செல்வதற்காக ஹஜ்ரத் ஜிப்ரயீல் (அலை.) அவர்கள் மற்ற மலக்குகளை அழைக்கும்பொழுது, இந்த இரவில் முஸ்லிம்கட்கு நாயன் யாது உபகாரஞ் செய்தானென்று அவர்கள் வினவுவார்கள் என்றும், அதுபொழுது 'கள்' குடிப்பவர்கள், பெற்றோர்களுக்கு நோவினை கொடுப்பவர்கள், பந்துக்களை வெறுத்துத் தள்ளியவர்கள், முஸ்லிம்களோடு கோபமாய் மூன்று நாளைக்குப் பேசாதிருப்பவர்கள் ஆகிய இவர்களைத் தவிர மற்றவர்களின் பாவங்களை அல்லாஹ் தஆலா மன்னித்து அவர்களுக்கு (ரஹ்மத்) கிருபை செய்தான் என்று ஜிப்ரயீல் (அலை.) பதில் சொல்லுவார்களென்றும்" இமாம் முர்ராஜி சொல்லுகின்றார்கள்.





அச்சங்கை பொருந்திய இரவானது 27ஆ இரவென்று சில பெரியார்கள் குறிப்பிட்டுச் சொல்லியிருப்பதால், அந்த இரவில் மஸ்ஜிதுகளில் விசேஷ ஏற்பாடுகள் செய்யப்படுவதும், சிற்றுண்டி வழங்கப்படுவதும் வழக்கமாகயிருக்கின்றன. சில சகோதரர்கள் இவ்விரவை ஆடம்பரங்களால் சிறப்பிக்கும் வேலைகளில் ஈடுபட்டு வெளிப்படையான இன்பத்தை அடைகின்றனர்; ஆதலால் அவ்விரவில் ஆண்டவனை வணங்கிப் பேரின்பத்தை யடைய வேண்டுமென்ற விஷயத்தை மறந்துவிடுகின்றனர். அத்தகையோர் தங்களுக்குக் கிடைத்த புற இன்பத்துடன் அக இன்பத்தையும் அடைய முயல்வார்களாக. இப்புண்ணிய இரவின் மாண்பை நஞ் சகோதரர்களும் நாமும் அடைய எல்லாம் வல்ல நாயன் கருணை பாலிப்பானாக.

---

## ஈதுல் பித்ரு

ரமலான் மாதம் முடிவடைந்தபின் ஷவ்வால் மாதம் முதல் தேதி யன்று முஸ்லிம்களால் கொண்டாடப்படும் திருநாளைக்கு "ஈதுல் பித்ரு" என்று பெயர். 'ஈது' என்ற அறபிப் பதத்திற்கு மடங்குதல், திரும்புதல் என்பது பொருள். இந்தத் திருநாளும் வருஷந்தோறும் மடங்கி மடங்கி வருவதால் இதற்கு ஈதுப் பெருநாளென்று பெயர் வழங்கலாயிற்று. இந்தப் பெருநாட்களுக்கு மதத்துடன் நெருங்கிய சம்பந்தம் உண்டு. எவ்வாறெனின், வருகிற 'ஈதுல் பித்ரு, பெருநாளானது நோன்பின் மாதமாகிய ரமலான் மாதம் மிகச் சிறப்பாக நிறைவேறி விட்டதென்ற சந்தோஷங்கொண்டாடும் திருநாளாகும். ரமலான் மாதத்திலேயே குர்ஆன் ஷரீபு வெளியாக்கப்பெற்றும், நபிகள்நாயகம்(ஸல்.) அவர்களின் நபித்துவமும் ஆரம்பிக்கப் பெற்றும்இருப்பதனாலேயே நோன்புநோற்பதற்கு இம்மாதம் குறிப்பாக நிர்ணயிக்கப் பெற்றது. ஆகவே ரமலான் மாதத்தின் மத்தியிலேயே இஸ்லாம் ஆரம்பித்திருப்பதால் ஷவ்வால் மாதந்தான் இஸ்லாத்தின் முதல்மாத மாகிறது. ஈதுப்பெருநாள் அம்மாதத்தின் முதல் தேதியாக இருக்கிறது. ஹிஜ்ரீ சகாப்தம் ஹஜ்ரத் உமர் (ரலி.) அவர்களுடைய காலத்திலேயே நிர்ணயிக்கப்பட்டு நபிகள் நாயகம் (ஸல்.) அவர்கள் ஹிஜ்ரத் சென்ற வருஷத்தை முதல் வருஷமாகக்கணிக்கப்பட்டுள்ளது. இந்த வருஷங்கட்கு முதல்மாதம் 'முஹர்ரம்.' ஆனால் நமக்கு நுபுவ்வத்திற்கே-இஸ்லாத்திற்கே முதலாவதாகவுள்ள மாதம் 'ஷவ்வால், மாதம் என்பதை நண்பர்கள் கவனித்தல்வேண்டும்.

எனவே தங்கள் உயிரினும் சிறந்த இஸ்லாம் மதத்திற்கு எம்மாதம் முதல் மாதமாகவும் அம் மாதத்திற்கு எத்தினம் முதல் தேதியாகவும் இருக்கிறதோ அத்தகைய நாள் முஸ்லிம்கட்கு எட்டுணைச் சந்தோஷத்தைக் கொடுக்கக்கூடிய திருநாளாக இருக்கின்றதென்பதை ஒவ்வொருவரும் சுலபமாக யூகித்தறிந்து கொள்ளலாம். இஃதன்றி ஒரு மாதகாலமாக பகலில் உணவையும், பானத்தையும் விட்டு முற்றிலும் விலக்கியிருந்து இறைவன்றன் கட்டளைகட்காக தங்கள் ஆசைகளையும் இச்சைகளையுந் துறந்து, ஆண்டவனது கட்டளையை பரிபூரணமாகச் செய்தவர்கட்கு இத்தினம் மிக மிக ஆனந்தத்தைக் கொடுக்கக் கூடியதாக இருக்கும். இந்த ஆனந்தத்தையும் சந்தோஷத்தையும்கொண்டாடுவது தான் பெருநாளாகும். அன்று காலையிலெழுந்ததும், நீராடி, உடைமாற்றி நாயகனுக்கு நன்றி செலுத்தும் பொருட்டு பெருநாள்த்தொழுகையைநிறைவேற்றவேண்டும். முஸ்லிம்களின் பெருநாள் முழுவதும் இந்தத்தொழுகை ஒன்றில்தானிருக்கின்றது என்பதை ஒவ்வொரு முஸ்லிமும் அறிய வேண்டும். மஸ்ஜிதிலோ அல்லது 'ஈதுகாஹ்' விலோ பெருநாள்த் தொழுகை நிறைவேற்றப்பட்டு அங்கு வந்த பந்து மித்திரருள்பட ஏனைய சகல முஸ்லிம்களுடன் முஸாபஹா, (கைகொடுத்தல்) முஆனகா (கட்டித் தழுவல்) ஆகியவைகளைச் செய்வதுடனேயே ஈதுப் பெருநாளின் சந்தோஷம் முற்றுப் பெறும். எல்லா ஜனங்களுடனும் எல்லோருடைய விட்டிற்கும் செல்ல முடியாது. நெருங்கிய பந்து மித்திரர்களின் இல்லங்களுக்கேகி தங்களின் சந்தோஷத்தைத் தெரிவித்துக் கொள்ள முடியும். ஆதலால் எல்லோரும் ஒரு இடத்தில் ஒன்று கூடவேண்டும்; ஒருவருக்கொருவர் நேசமுடன் உறவு கொண்டாடவேண்டும் என்னும் நோக்கத்துடனேயே யாவரும் இத் தொழுகையை ஜமா அத்தாகத் தொழவேண்டுமென இஸ்லாம் மதம் ஏற்படுத்தியிருக்கிறது பல கிராமங்கள் ஒன்று கூடி ஓரிடத்தில் தொழுவதை கிராமவாசிகள் அறிவர். பெரிய நகர்களில் பல பள்ளிகளிலும் ஜும்ஆத் தொழுகை நிறைவேற்றுவதுண்டாயினும் இந்த ஈதுத் தொழுகையை மாத்திரம் ஈதுகாவில் நிறைவேற்றுகின்றனர். குறிப்பிட்ட அந்தஸ்தலத்திற்குச் செல்ல முடியாதவர்கள் நகரத்தின் ஒன்றிரண்டு பள்ளிகளிலேயே நிறைவேற்றுகின்றனர் இவ்வாறு ஓரிடத்தில் ஒன்றுகூடுவதால் அறிமுகமில்லாத பலரைக்காணவும் பேசவும் சந்தர்ப்ப மேற்பட்டு பரஸ்பரம் நட்புரிமை அதிகமாவதற்கிடமுண்டு. ஆகவே இஸ்லாம் மதத்தில் சகோதரத்துவமும் கூட்டுறவும் எத்துணை முக்கியமாகக் கருதப்பட்டிருக்கிறதென்பதையும், தற்போது முஸ்லிம்களாகிய நம்மவரில் எவ்வளவு தூரம் அனுஷ்டிக்கப்படுகின்றதென்பதையும் நாம் சிந்தித்துப் பார்ப்பது அவசியமாகும்.

இந்த சந்தோஷதினத்திலுங் கூட ஏனைய மதத்திலுள்ள சில கட்டுதிட்டமல்லாத காரியங்களைப்போலொன்றும் நடைபெறாதவாறு இஸ்லாம்மதம் இதை மட்டுப்படுத்தி வைத்திருக்கிறது. ஆதலின் அத்தினத்தில் கூத்து ஆட்ட பாட்டம், சூதாடல், முதலிய தூர்கிரியைகளில் ஈடுபட்டு அத்தினத்தின் பிரயோசனம் நமக்குக் கிடைக்காதிருக்கும்படி செய்வது அறிவின்மையாகும். வருகிற இந்த ஈதுப் பெருநாளை மகிழ்ச்சியுள்ளதாய்த் திகழுமாறு இறைவன் செய்து ஒவ்வொருவருக்கும் உண்மையான பெருநாளாக ஆக்கி அருள்புவானாக ஆமீன்.

---

### பராஹீனுல் குர்ஆனிய்யா பீ ரத்தி மலாயிலில் காதியானிய்யா.

இப்பெயர்கொண்ட உயரிய அரபுத் தமிழ் நூலில் பிதற்றித் திரியும் காதியானிகளின் கூற்றுக்களுக்கு குர்ஆனின் ஆதாரங்களைக்கொண்டு தக்க வாயாப்புக் கொடுக்கப் பெற்றுளது. இந்நூல் ஒவ்வொருவருக்கும் அவசியம். இதன் கிரயம் அணு 8. வேண்டுவோர் ஹாஜி குளம் அஹமத் முஹ்பித்தீன் ஆலீம் சாஹிபு, சதுக்கைத் தெரு, காயல் பட்டணம், ஸைபுல் இஸ்லாம் புக் டிபோ, 47, செம்புதாஸ் தெரு, சென்னை, மௌலவீ M. சுல்த்தான் அஹமது ஸாஹிப் புக், ஜவுளி டெபோ, தபால் பெட்டி நெ. 1242. 1|222, அங்கப்ப நாய்க்கன் தெரு, சென்னை, என்ற விலாசங்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

## பித்று ஸதக்கா

"எந்த மனிதன் தன்பேரில் வாஜிபாயிருக்கக் கூடிய ஸதக்கத்துல் பித்றைக் கொடுப்பானோ அவனுக்கு 10 வஸ்துக்கள் கொடுக்கப்படும்" என நபிகள் திலகம் ரசூல் (ஸல்.) அவர்கள் திருவாய் மலர்ந்தருளியிருக்கின்றார்கள். அவைகளாவன :—

1. வது அவனின் சரீரம் பாவங்களை விட்டும் துப்புரவாகி விடுகிறது. 2 வது நரக லோகத்தை விட்டும் அவன் விடுதலை செய்யப்படுவான். 3-வது அவனின் நோன்பு ஆண்டவன் சன்னிதானத்தில் ஒப்புக்கொள்ளப்படும். 4-வது அவன் சொர்க்க லோகத்தில் நுழைவதற்குப் பாத்தியஸ்தனாகின்றான். 5-வது அவன் கபுறை விட்டு எழும்பும்போது கியாமத் நாளின் அதாபின் யாதொரு பயமின்றி புறப்படுவான். 6-வது அவன் அந்த வருஷத்தில் செய்திருக்கின்ற நலவான காரியங்களடங்களும் ஒப்புக்கொள்ளப்படும். 7-வது அவனுக்கு நாயகம் (ஸல்.) அவர்கள் கியாமத் நாளில் ஷபாஅத்துச் (மன்றாட்டம்) செய்வார்கள் 8-வது ஷிறாத்துல் முஸ்தகீம் என்னும் பாலத்தின்மீது மின்னல் வெட்டி மறைவதுபோல் செல்வான். 9-வது அவனது தின்மைத் தட்டை இலேசாக்கி நன்மைத் தட்டை கனமாக்கப்படும். 10-வது அல்லாஹுத் (ஜல்.) அவனை ஜெயம்பெற்ற சீதேவிகளுடைய கூட்டத்தில் ஆக்கிவிடுவான்.

எவன் தன்மீது கடமையாக்கப்பட்ட 'ஸதக்கத்துல் பித்றை' கொடுக்கவில்லையோ அதுவரை அன்னவனின் நோன்பானது ஆண்டவனுடைய சன்னிதானத்திற்கு உயர்த்தப்படமாட்டாதென்று ஹதீது ஷரீபில் கூறப்பட்டிருப்பதால் நாமனைவரும் நம்மீது கடமையாக்கப்பட்ட பித்றுவுடைய ஸதக்காவைக் கொடுத்து ஜெயம் பெற்றவர்களாக ஆகும்படி ஆண்டவன் கிருபை பாலிப்பானாக.

### ஸதக்கா கொடுக்கும் விதம்.

(ஹனபீ மத்ஹப் பிரகாரம்)

எவனிடம் தனது தேவைக்கதிகமாக $52\frac{1}{2}$ ரூபாய்ச் சொத்தாவது அல்லது ரொக்க ரூபாயாவது இருக்கும் பட்சத்தில் அதன்பேரில் ஒரு வருஷம் செல்லுபடி யாகாவிட்டாலும் சொத்து வளரும்படியானதாக வில்லாவிட்டாலும் அச் சொத்துடைய ஒவ்வொருவரும் பித்று ஸதக்காக் கொடுக்கவேண்டும் (வாஜிபு)

ஸதக்காக் கொடுப்பதால் ஏழைகட்கு உபகாரஞ் செய்வதாகும். மேலும் அன்றயப் பெருநாளில் அவர்களும் மற்றவர்களுடன் சேர்ந்து சந்தோஷங்கொண்டாட ஹேதுவுண்டாகின்றது. இதனாலேதான் பித்று ஸதக்காவைத் தொழுகைக்குச் செல்லுமுன் கொடுப்பதும், ஸதக்காவை தானியமாகக் கொடுப்பதைக் காட்டினும் ஏழைகள் தங்கட்கவசியமானவைகளை சுலபமாக வாங்கிக்கொள்ளும் வண்ணம் அதன் கிரயத்தைக் கொடுப்பதும் உத்தமமென்று சொல்லப்படுகிறது.

குடியிருக்க வீடு, சவாரி செய்ய வாகனம் முதலிய அவசியமான செலவுகளுக்கு மேல் $52\frac{1}{2}$ ரூபாய்ப் பெறுமானமுள்ள சொத்துடைய ஒவ்வொருவரும் தனக்காகவும், தன் சிசுக்களுக்காகவும் பித்று ஸதக்கா கொடுப்பது வாஜிபு. ஆனால் பருவமடைந்த தன் மக்கள் முதலியவர்கட்காக 'பித்று ஸதக்காக்' கொடுக்க அவன் கடமைப்பட்டவனல்லன். ஆனால் மேல் கூறப்பட்டவர்களிடமும் 'ஸதக்காக்' கொடுப்பதற்கேற்பட்டுள்ள அளவு சொத்திருந்தால் அவர்கள் பிரத்தியேகமாக ஸதகாக் கொடுக்கவேண்டும். (வாஜிபு) பருவமடையாத தன் குழந்தைக்கு பிரத்தியேகமான சொத்து இருக்குமாயின் அச்சொத்திலிருந்தே அக்குழந்தைக்குரிய 'பித்று ஸதக்' காவைக் கொடுக்கவேண்டும். சித்தஸ்வாதீனமற்ற தன் பெரிய குழந்தைக்காக தகப்பனே ஸதக்கா கொடுக்கவேண்டும். நோயாளி, பிரயாணி, கற்பஸ்திரீ, மாதவிடாய்கொண்ட பெண் ஆகியவர்கள் மேற்கண்ட காரணத்தால் நோன்பு நோற்காவிடினும் மேற்கண்ட விகிதப்படி அவர்களிடம் சொத்திருந்தால் அவர்களும் 'பித்று ஸதகா' கொடுக்கவேண்டும் (வாஜிபு)

ஈதுல் பித்றுப் பெருநாளாகிய ஷவ்வால் மாதம் முதல் தேதியன்று கிழக்கு வெளுத்த வுடன் பித்று ஸதக்கா கொடுப்பது வாஜி பாக ஏற்படுகின்றது. இந்தத் தேதிக்குமுன் கொடுத்தாலும் அது நிறைவேறிவிடும் ஆனால் அன்றையதினம் பெருநாள் தொழுகைக் குப் போகுமுன் கொடுப்பது முஸ்தஹப்பு. ஷை தேதியில் கிழக்கு வெளுத்தவுடன்பித்று ஸதக்கா வாஜிபாக ஏற்படுவதால் கிழக்கு வெளுப்பதற்கு முன் குழந்தை பிறந்தால் அக்குழந்தைக்காக பித்று ஸதக்கா கொடுப் பதும் வாஜிபு. கிழக்கு வெளுத்தபின் பிறந்த குழந்தைகளுக்காகக் கொடுப்பது வாஜி பன்று. கிழக்கு வெளுப்பதற்கு முன் குழந்தை பிறந்து கிழக்கு வெளுத்தபின் அக் குழந்தை இறந்துபோனாலும் அக்குழந்தைக் காகவும் ஸதக்கா கொடுப்பது வாஜிபு. பித்று ஸதக்கா கொடுப்பதற்கு சொத்து உள்ளவ னாக ஒருவன் கிழக்கு வெளுக்கும்போது இருந்து கிழக்கு வெளுத்தபின் ஏழையாய் விட்டால் அவனும் பித்று ஸதக்கா கொடுக் கக் கடமைப்பட்டவனாவன்.

மணிக் கோதுமை, முந்திரிப்பழம், கோது மைமாவு, ரவா ஆகியவைகளை பித்று ஸதக்கா வாகக் கொடுக்கவிரும்பினால் அரை 'ஸாஉ' கொடுக்கவேண்டும். வார்க்கோதுமை, பேரீச் சம்பழம் ஆகியவைகளைக் கொடுப்பதாயின் ஒரு 'ஸாஉ' கொடுக்கவேண்டும். இவைகளை அல்லாமல் தன்னிடமுள்ள நெல், சோளம், கம்பு, கேழ்வரகு, முதலிய தானியங்களை ஸதக்காவாக கொடுக்கவிரும்பினால் முற்கூறப் பட்ட அளவுள்ள கோதுமை முதலியவைகளை கிரயம் போட்டு அக்கிரயத்திற்கேற்ற தானி யத்தைக் கொடுக்கவேண்டும். இவ்வாறு கொடுப்பதைப் பார்க்கினும் கிரயத்தைப் பார்த்துப் பணமாகக் கொடுப்பதே மேல்.

ஜக்காத்து பணத்தை யார்யாருக்குக்கொடு க்கலாமோ அவர்களுக்கு பித்று ஸதக்காவும் கொடுக்கலாம். ஆனால் பந்துக்களில் பித்று ஸதக்காவை வாங்க யோக்கியதையுள்ளவர்க ளாயிருந்தால் அவர்களுக்குக் கொடுப்பது தான் நலம். பலருடைய ஸதக்காவை ஒரு மிஸ்கீனுக்குக்கொடுக்கலாம். அவ்வாறே ஒரு வருடைய ஸதக்காவைப் பலருக்கு கொடுத் தலும் பொருந்தும். ஆயினும் அவ்வாறு ஒரு வருடைய ஸதக்காவைப் பலருக்குக் கொடுப் பது கூடாதென சிலர் கூறுவர்; ஆதலால் பேணுதலுக்காக ஒருவருக்கே கொடுத்து விடல் உத்தமம்.

1040 திருஹத்தின் எடையுள்ள உளுந்து, அல்லது கொள்ளின் அளவுள்ள அளவிற்கு ஒரு 'ஸாஉ' (மரக்கால்) என்று பெயர். மௌலானா மௌலவீ குலாம் காதிர் சாஹிபு அவர்கள் 200 திருஹம் $52\frac{1}{2}$ ரூபாய் எடை யுள்ளதென்று கணக்கிட்டிருக்கிறார்கள். இக் கணக்குப்படி 1040 திருஹத்திற்கு 273 ரூபாய் எடை ஆகும். தற்சமயம் அரசாங்க அமலிலுள்ள அளவைகளில் பட்டணம் படி யில் ஒருபடி 130ரூபா எடையுள்ளது. இதன் படி ஒரு 'ஸாஉ' என்பது 2படியும் 13ரூபாய் எடையுள்ளதுமான $2\frac{1}{10}$ படியாகும். இக் கணக்குப்படி அரை 'ஸாஉ' என்பது மதராஸ் படியில் சுமார் ஒன்றே ஒரு வீசம்படியாகி றது. தற்போது மதராஸில் மணிக்கோதுமை படி ஒன்றுக்கு 0-4-6 ஆக விற்கிறது. இதன் படி ஒன்றே ஒரு வீசம் படிக்கு சுமார் 0-4-9 ஆகிறது. ஆனால் பேணுதலுக்காக 5 அணாவாகக் கொடுத்துவிடுவது மேல். இது தான் ஒருவருடைய ஸதக்கத்துல் பித்ருகும். இவ்வாறே அந்தந்த ஊர்களில் கோதுமை விலையை அனுசரித்து அதன் கிரயத்தைக் கொடுக்கவேண்டும்.

(ஷாபிஈ மத்ஹப் பிரகாரம்)

தனக்காகவும் தன் போஷணையிலிருக்கின்ற மனைவி மக்கள் முதலானவர்களுக்காகவும் தன் ஊரில் முக்கியமாக உபயோகிக்கப்படு கிற தானியத்தில் பித்று ஸதக்கா கொடுப் பது வாஜிபு. அதன் விலையைக் கொடுக்க கூடாது. கெட்டுப்போன அல்லது குறை வுள்ள அல்லது ஈரமுள்ள தானியங்களை கொடுக்கக்கூடாது. ஆனால் அந்த ஈர காய்ந்து அதைப் பத்திரப்படுத்திவைக்கவோ அல்லது உணவிற் குபயோகிக்கவோ தகுந் தாக யிருந்தால் அதைக் கொடுக்கலாம். இந்த 'பித்ரா' வாஜிபாவதற்கு 4 ஷர்த்து ளிருக்கவேண்டும். அவையாவன:—

1. முஸ்லிமாக யிருத்தல்வேண்டும். த போஷணையி லிருப்பவர்களுக்காக 'பித் கொடுக்கவேண்டுமாயின் அவர்களும் முஸ் மாயிருத்தல்வேண்டும். (2) தான் அடிமையா இருக்கக்கூடாது. (3) பெரு நாளிரவு வ வது ரமலானின் கடைசி நாள் சூரியாஸ்தம



மாகுதல். (4) கடனில்லாமலும், தன்பராமரி ப்பிலுள்ள மனைவி மக்கள் ஆகியவர்களுக்குத் தேவையான இருப்பிடம், உடமை, உடை, முதலியவைகள் பெரு நாளின் இரவு பகலில் தனக்கும் தன் குடும்பச் செலவுகட்கும் தேவையானவைகள் போக அதிகப்படியான சொத்துக்கள் இருக்க வேண்டும்.

இந்த 4 ஷர்த்துக்களில் ஏதேனு மொன் றில்லாதிருந்தாலும் ஸதக்கா வாஜிபாகாது. ஆகவே ஈதுப் பெரு நாளைக்குமுந்தின தினத் தில் சூரியாஸ்தமன மானதன் பிறகு பிறக்கும் குழந்தைகள் விவாகஞ் செய்து கொள்ளப் பட்ட மனைவி ஆகியவர்களுக்காக பித்று கொடுக்க வேண்டியதில்லை. ஷை சூரியாஸ்த மனத்திற்குப்பின் பணக்காரராலும், இஸ் லாம் மதத்தைத் தழுவினாலும் அவன் பேரில் ஸதக்கா வாஜிபு இல்லை. ஷை சூரியாஸ்த மனத்திற்குப்பின் ஸதக்கா கொடுக்காம லிற ருந்து விட்டாலும் தன் மனைவியை விவாக விலக்குச் செய்து விட்டாலும் தன் சொத் துத்துலைந்து போனாலும் அவன்மீது வாஜி பான பித்று அவனைவிட்டும் நீங்காது. ரம லான் மாதத்தில் கடைசி நாளின் சூரியாஸ்த மனமானதி லிருந்து மறுநாள் அதாவது சூரி யாஸ்த மனமாகும் வரை பித்று கொடுக்க லாம். ஆனால் பெருநாள் தொழுகைக்கு முன் பித்றுவைக் கொடுத்து விடுவது ஸுன் னத்து. இதற்கு மேல் காரணமில்லாமல் பிற் படுத்துவது மக்ருஹ்; ஆனால் தனக்குபந்து வானவர்களில் ஏழைகளை எதிர்பார்த்து அவர்களுக்காக ஸதக்காவைப் பிற்படுத்து வது ஸுன்னத்து.

---

## ஈதுப்பெருநாள்த் தொழுகை.

ஜும்ஆத் தொழுகை வாஜிபானவர்கள் மீது 2 ஈதுப் பெருநாள் தொழுகைகளும் வாஜிபாகும். ஆனால் தொழுகைக்குப் பின் குத்பா ஓதுவது வாஜிபன்று; எனினும் ஸுன்னத்தாகும். ஒரு ஊரில் பல விடங்களில் பெருநாள்த் தொழுகையை நிறைவேற்றலாம். ஆனால் ஒரே ஒரு இடத்தில் தொழுவது நல் லது. பெருநாள் தொழுகை யாவரும் ஒன்று சேர்ந்து தொழுவதற்காக ஏற்பட்டிருப்ப தால் 'ஜமாஅத்து' தவறிவிட்டால் அதைக் களாச் செய்யவேண்டியதில்லை. ஆனால் வேறு இடத்தில் ஜமாஅத்தாகத் தொழலாம். மேற் படி தொழுகை எல்லோருக்கும் தவறிட்டா லும், அல்லது ஷவ்வால்மாதப் பிறையைக் கண்ட சமாச்சாரம் பாதிப் பகலுக்குப் பின் கிடைத்தாலும், ஈதுல் பித்று தொழுகையை மறுநாளில் தொழலாம். மறுநாளில் தவறி விட்டால் 3 வது நாளில் தொழக்கூடாது. ஈதுல் அல்ஹாப் பெருநாள் தொழுகையை துல்ஹஜ்ஜு மாதத்தின் 10, 11, 12 ஆகிய தேதிகளிலும் தொழலாம். ஆனால் காரண மின்றி மறுநாளைக்குப் பிற்படுத்துதல் மக் ருஹ். சூரியோதயத்திற்குப்பின் ஒருவல்லயப் பிரமாணத்திற்கு சூரியன் வந்ததிலிருந்து, (அதாவது சூரியன் கிளம்பி சுமார் ஒரு மணிக்குப் பின்) நடுப்பகல் வரை பெருநாள் தொழுகையை நிறைவேற்றலாம். இதுதான் பெருநாள் தொழுகைக்கேற்ற நேரமாகும். ஆனால் தொழுகையை நிறைவேற்றிக்கொண் டிருக்கும்பொழுதே மத்தியானமாகிவிட்டால் அந்தத் தொழுகை நிறைவேறாது. மேற் குறித்த நேரத்திற்குள் ஈதுல் பித்றுப் பெரு நாள்த் தொழுகையை தாமதித்தும், ஈதுல் அல்ஹாப் பெருநாள்த் தொழுகையை தீவிர மாகவும் நிறைவேற்றுதல் முஸ்தஹப்பு.

இமாமானவர் இந்தப் பெருநாளின் தொழுகையை அல்லாஹுக்காக தொழ வைக்கின்றேன் என்றும், முக்ததீ (துயர்ந்து தொழுபவன்) இந்த இமாமைப்பின் துயர்ந்து இந்த ஈதுப் பெருநாள்த் தொழுகையை அல் லாஹ்வுக்காக தொழுகின்றேன்' என்றும் நிய் யத்துச் (நிர்ணயம்) செய்து "அல்லாஹு அக்பர்" என தக்பீர்கட்ட வேண்டும்; பின்பு 'தனா' ஓதி விட்டு கையை உயர்த்தி 'தக்பீர்' சொல்லி கையைத் தொங்கவிடவேண்டும். இவ்விதமாக இரண்டு முறை தொங்கவிட்டு மூன்றாவது முறையில் தக்பீர் கட்டிக்கொள்ள வேண்டும். இவ்விதமாக மூன்று முறை தக்பீர்

சொல்வதில் ஒவ்வொரு முறையின் இடை
நேரத்தில் மூன்று 'தஸ்பீஹ்' நேரம் மௌன
மாக யிருக்கவேண்டும். இவ்வாறு தக்பீர்
கட்டுவதில் 'தக்பீர் தஹ்ரீமா'வையும் சேர்த்து
நான்குமுறை தக்பீர் சொல்லவேண்டியதிருக்
சிறது.பின்பு வழக்கமாக எல்லாத் தொழுகை
களிலும் ஓதுவதுபோல் அவூது, பிஸ்மில்லா,
ஸூரத்துல் பாத்திஹா, கிராஅத், இவை
களை ஓதி ருகூஉ, சுஜூது செய்து இரண்டா
வது றகஅத்தை ஆரம்பித்துத் தொழவேண்
டும். ஆனல் கிராஅத்து ஓதி முடிந்தபின்
முற்கூறிய பிரகாரம் மூன்று முறை தக்பீர்
சொல்லி கையைத் தொங்கவிடவேண்டும்.
பின்பு நான்காம் முறை தக்பீர் சொல்லி
'ருகூஉ' செய்யவேண்டும். இவ்விதமாக
இரண்டு றகஅத்து களையும் தொழுது ஸலாம்
கொடுத்தபின் குத்பா ஓதவேண்டும். பெரு
நாளன்று பெருநாள்த் தொழுகைக்குமுன்
நபில் தொழுவது மக்ரூஹ். பெருநாள்த்
தொழுகையை நிறைவேற்றியபின் வீட்டிற்கு
வந்து 4 றகஅத்து நபில் தொழுவது நல்
லது. ஈதுல் பித்று தொழுகைக்குச் செல்லு
வோர் வழியில் மெதுவாக தக்பீர் சொல்லிக்
கொண்டு போகவேண்டும். ஆனல் உரக்கச்
சொல்பவர்களைத் தடுக்கவும் கூடாது. ஈதுல்
அல்ஹாத் தொழுகைக்குச்' செல்லும்போது
வழியில் தக்பீரை இரைந்து ஓதிக்கொண்டு
செல்லவேண்டும்.

ஈதுல் பித்றுப் பெருநாளன்று தொழுகை
க்குமுன் ஒன்று அல்லது 3 அல்லது 5 பேரீத்
தம் பழங்களையேனும்,வேறு மதுரமான வஸ்
துக்களையேனும் புசிப்பது 'முஸ்தஹப்பு.'
ஈதுல் அல்ஹாப் பெருநாளன்று அத்
தொழுகையை நிறைவேற்றுவதற்கு முன்
யாதொன்றையும் புசிக்காமலிருப்பது 'முஸ்த
ஹப்பு.'

இரண்டு பெருநாள்களிலும் பஜ்ருக்குப்
பின் மிஸ்வாக்குச் செய்து பல் துலக்கி
நீராடி தன்னிடமுள்ளவைகளில் சுத்தமான
தும் அழகானதுமான உடைகளை யணிந்து
வாசனை திரவியங்களைப் பூசி தக்பீர் சொல்
லிக்கொண்டு தொழுகை நிறைவேற்றப்படும்
இடத்திற்கு நடந்து செல்வது முஸ்தஹப்பு.
வாகனங்களில் ஏறிச் செல்வது குற்றமில்லை.
'ஈது'ப் பெருநாள் தொழுகைக்குப் போகும்
போது ஒரு ரஸ்தா வழியாகச் சென்று
வேறு வழியாக திரும்பி வருவது முஸ்த
ஹப்பு.

ஈதுத் தொழுகையில் இமாம் தக்பீர்
சொன்னபின்பு ஒருவன் வந்து இமாமுடன்
சேர்ந்தால் தானகவே மூன்று முறை கையை
உயர்த்தி தக்பீர் சொல்லிக்கொள்ளல் வேண்
டும். இமாம் 'ருகூவி'லிருக்கும்போது வந்து
சேர்ந்தால் 'ருகூஐ' விட்டு நீங்குவதற்குமுன்
தக்பீர் சொல்லி அப்புறம் இமாமுடன் ருகூ
வில் சேர்ந்துகொள்ளலாம் எனத் தோன்றி
னல் அவ்விதம் செய்யலாம். இன்றேல் இமா
முடன் ருகூவில் சேர்ந்துகொண்டு அதிலேயே
மூன்று முறை தக்பீர் சொல்லவேண்டும்.
ஆனல் ருகூவில் தக்பீர் சொல்லும்போது
கையை உயர்த்தவேண்டியதில்லை. 'ருகூவி'ல்
'தக்பீர்' சொல்லி முடிவதற்குள் இமாம்
ருகூஐ விட்டு நீங்கிவிட்டால் தக்பீர் சொல்வ
தையும் விட்டுவிடவேண்டும். இமாம் ஒரு றக
அத்து தொழுதபின்போ அல்லது இரண்டா
வது றகஅத்தில் இமாம் ஸுஜூது அல்லது
இருப்பிலிருக்கும்போதோ ஒருவர் வந்து
சேர்ந்தால் இமாம் ஸலாம் கொடுத்தபின்
எழுந்து தவறினவைகளை தொடர்ந்து தொழ
வேண்டும். ஆனல் தவறினவைகளை நிறை
வேற்றும்பொழுது கிராஅத்துக்குப் பின்
தான் தக்பீர் சொல்லவேண்டும். இமாமுடன்
தொழுகை கிடைக்காவிடில் வேறிடத்தில்
ஜமாஅத்து நடந்தால் ஆங்குச்சென்றேனும்
இமாம் ஜமா அத்துடன் தொழுகையை நிறை
வேற்ற வேண்டும். இல்லாவிடில் நான்கு
றகஅத்து, நபில் தொழவேண்டும் (துர்ருல்
முக்தார், காஜிகான்.)

---

" ஹிபாஜத்துல் இஸ்லாம் "

(முதல் வாலல்யூம்.)

நமது 'ஹிபாஜத்துல் இஸ்லாம்' மாசிகையின் முதல் வால்யூம் பைண்டு செய்து
தயாராயிருக்கின்றது. சொற்பப் பிரதிகளே கைவசமுள்ளன வாதலால், சீக்கிரம் ஆர்டர்
செய்து பெற்றுக் கொள்ள விரும்புகின்றோம்.

காலிகோ பைண்டு விலை ரூ. 3—8—0; தபால் செலவு வேறு.

# பகுத்தறிவுடைய பித்தர்.

பகுத்தறிவு என்பதை யாவரும் ஒப்புக்
கொள்வதாலும், மனிதர்க்குப் பகுத்தறிவு
என்பது அவசியமாய் இருத்தலாலும், தற்
காலத்தில் மதத் தொடர்பான விஷயங்களைச்
சிலர் பகுத்தறிவு என்னும் துலாக்கோல்ப்
பிடித்து நிறை தூக்கிப் பார்க்கின்றனர்.
இதனை நாம் வர வேற்கின்றோம். பகுத்
தறிவால் எல்லா விஷயங்களையும் மனிதன்
ஆராய்ச்சி செய்வதற்குத் தடை யாதும்
கிடையாது. ஆயின் பகுத்தறிவில் விளக்க
மாகும் முடிபுகள் அனைத்தும் உண்மை
யானவை தாமோ என்னும் ஐயம் பிறவாது
இருப்பதற்கு இல்லை. உதாரணமாக, மது
அருந்தல் என்னும் ஒரு பழக்கத்தை எடுத்
துக்கொள்ளுவோம். மது அருந்தல் என்னும்
பழக்கத்தைப் பகுத்தறிவால் ஆராய்ச்சி
செய்த சிலர் இதனைக் கைவிட்டனரல்லர்.
மிதமாக மது உண்டால் உடலுக்குறுதி
என்றே செப்புகின்றனர். இவர்களுடைய
பகுத்தறி விற்கு மதுவுண்டல் அஃதாவது
கட்குடித்தல் என்னும் பழக்கம் பகுத்தறி
வின் விசாரணைக்கு 'நல்ல' விடையே அளித்
திருக்கின்றது. எனினும்,

தலைசிறந்த இஸ்லாம் மதம் இதனைக் கொடி
யது என்று விலக்கி விட்டது. அநேகர்
பகுத்தறி விற்கும், இஸ்லாம் மதத்தினரல்லா
தார் பலரின் பகுத்தறிவிற்குங் கூட கட்
குடித்தல் தீய செயலாகவே தோன்றுகின்
றது. எனவே, பகுத்தறிவு என்பது ஒரு நிலை
மையை உடையதாக இல்லை என்று இனிது
புலனுகின்றது. பகுத்தறிவு, பகுத்தறியும்
மனிதனுடைய குணங்கள், ஆற்றல், நிலைமை,
பயிற்சி இவைகளைப் பொறுத்தே இருப்ப
தால், நூற்றுக்கு நூறு குணமேம் பாடும்,
ஆற்றலும், நன்னிலைமையும், நற்பயிற்சியும்
உடைய ஒரு மனிதன் இருப்பானுயின் இத்
தகை பூரணத்துவம் பெற்ற ஒரு மனிதனின்
பகுத்தறிவை எல்லா மக்களும் ஒப்புக்
கொள்ள மறுப்பதற்கு நியாயம் இல்லாம
லிருக்கும். ஆனல் பல விவகாரங்களால்
குணவேறுபாடு, ஆற்றற்குறைவு, நன்னிலைமை
யின்மை, பயிற்சி வளமின்மை இவைகளை,
உடைய எந்த மனிதனும் தன் பகுத்தறிவிற்
புலப்பட்ட விஷயங்களை உண்மைகள் என்று
சாதிக்க முன்வருவானுயின் அவன் பயித்தி
யக்காரர் நிலையத்திற்றான் குடி இருக்கத்
தக்கோனுகின்றனன். பகுத்தறிவு என்பது
ஒரே தன்மையானதாய், எல்லா மனிதர்
களாலும் ஒரே முடிவிற்கு வரக் கூடு
மாறு விடை கொடுக்கும் வன்மை பொ
ருந்தியதாய், குழந்தை முதல் கிழவர்
வரையில் எடுத்தாளக் கூடியதாய் இருக்கு
மாயின், பகுத்தறிவை யார்தாம் ஒப்புக்
கொள்ள மறுப்பர்? ஆனல் மனிதனுக்குத்
தக்கவாறு பல்வேறு கூருக விளங்கக்கூடிய
பகுத்தறிவால் சீர்தூக்கி மதக் கொள்கைகளை
இக்காலத்தில் (எக்காலத்திலும் இது ஒரு
வழக்கமாகவே இருக்கின்றது) மாற்றப் புறப்
பட்ட சிலரைக் கண்டு நாம் கோபிப்பதற்
கில்லை; அவர்கள் சிற்றறிவாம் பகுத்தறி
வுடைய சின்னஞ் சிறிய மூளையை இறைவன்
விருத்தி செய்து கொடுப்பானுக என்றே
இரங்குதல் உடையவர்களாகின்றோம்.

நிற்க, வேறுபாடுடைய இப்பகுத்தறிவை
விசேடமாய் படைத்துவிட்டதாக செருக்
குற்று "மலேயா ட்ரிப்யூன்" என்னும்
மலாய்நாட்டு ஆங்கிலப் பத்திரிகையில் "பகுத்
தறிவுடைய முஸ்லிம்" என்னும் புனைப் பெய
ருடன் ஒருவர் ஹஜ்ஜு யாத்திரை என்பது
ஓர் அரசியல் சூழ்ச்சி என்றும், கஃபாவை
இப்ருஹீம் (அலை.) அவர்கள் கட்டவில்லை
யென்றும், 'லைலத்துல் கத்ர்' என்னும் நல்லி
ரவை நன்னம்பிக்கை கொள்வது மூடப்பழக்
கம் என்றும் வியாசப் போர் தொடுத்து வரு
தலைக் கண்ணுற்றோம். இவரது வியாசங்
கட்கு சிங்கப்பூர் வாசி ஜனப் கே. பத்ருத்தீன்,
"இஸ்லாமிகா", "எளிய முஸ்லிம்" என்பவர்
கள் ஆணித்தரமான விடை கூறியிருக்கின்
றமை கண்டு மனமகிழ்கின்றோம்.

ஈண்டு ஒன்றுமட்டும் நாம் குறிப்பிட
விரும்புகின்றோம்:—இஸ்லாம் மதமும் இதிற்
காணும் பழக்க வழக்கங்களும் இறைவனல்
அளிக்கப்பட்டனவையா யிருப்பதால் பூரண
பகுத்தறிவுடைய மனிதனுக்கு நிச்சயமாய்

ஒத்தவையாய் இருக்கும். ஆனால் அவைகளிற் சில நம் பகுத்தறிவிற்கு ஒத்ததாகக் காணப்படாமலிருக்குமாயின் அவைகளை நம் பகுத்தறிவின் குறைவென்றே கூறவேண்டுமே யல்லாது பகுத்தறிவிற் கொத்ததாயில்லை என்று கூறுவது தகமையுடையதல்ல; பகுத்தறிவுக்காரர்கள் இறைவனையோ, திருமறையினையோ, திருத்தூதர்களையோ நம்பாதவர்களாய் தங்கள் இரண்டடி சுற்றளவுள்ள தலையில் உள்ள 10 அவுன்ஸ் மூளையால் உண்மைகளை நிறை தூக்கிப்பார்க்க முன் வந்தவர்கள், இத்தகைய பித்தர்கட்கு நாம் விடையிறுப்பது இவர்கள் மொழிகளைக் கேட்டு வேறு சிலர் மயங்கா வண்ணமேயாம். எனினும் வேண்டுமென்றே, வலியப்போர்தொடுக்கும் வாய் வீணர்கட்கு நமது அருமையான காலத்தை ஈடுபடுத்தல் நலமாமோ என்று ஐயுறுகின்றோம்.



# ஜகாத்

மேலும் நீங்கள் தொழுகையைக் கடை பிடித்துக் கொள்ளுங்கள்: ஜகாத்தைக் கொடுங்கள் இன்னும் (தற்சமயம் இவ்வுலகில்) நீங்கள் உங்களுக்காக என்ன நன்மையைச் செய்து வைத்திருந்த போதிலும் அதை (பிற்காலத்தில்) அல்லாஹ்விடம் பெற்றுக்கோள்வீர்கள். நிச்சயமாக அல்லாஹ் நீங்கள் செய்வதைப் பார்த்துக் கோண்டிருக்கின்றான். அல்குர்ஆன்.

“ஜகாத்” என்ற அரபிப் பதம் பரிசுத்தப்படுத்தல், விர்த்தியாக்கல் என்னும் பல விசேஷப் பொருட்களைக் கொண்டுள்ளன. எனவே உலோபித்தனமென்ற மாசைச்சுத்தி செய்வான் வேண்டி எமது பரிசுத்த இஸ்லாம்” எத்தகைய அபூர்வ மந்திரத்தைக் கையாண்டிருக்கின்றதென எண்ணுகின்றீர்கள்!

அத்தியாவசியமான செலவுகள்போக $52\frac{1}{2}$ ரூபாய் மதிப்புள்ள பொருள் படைத்த ஒவ்வொரு முஸ்லிமும் ஆண்டுக்கோர் முறை தமது ஐசுவரியத்திலிருந்து நாற்பதிலொரு பாகத்தை இத்தகைய பொருள்களில்லாத ஏழைமக்கட்குப் பகிர்ந்துகொடுத்து அதனால் தனது ஆஸ்தி அதிகம் தழைத்தோங்கும் பொருட்டு ஹிஜ்ரி இரண்டாம் ஆண்டில் விதியாக்கப்பட்ட இஸ்லாத்தின் மூன்றாங் கடமையன்றோ இஃது? என்னே! எமது காருண்ய “இஸ்லாம்” ஏழைகளின் வறுமையை ஒருவாறு நீக்குவான் வேண்டி அருளையே உருவாய் அமைத்துள்ள தன் சட்டதிட்டங்களென்ற திருமறையின்கண் 82 இடங்களில் அந்த ஜகாத்தைக் கொடுக்கும்படி வற்புறுத்துகின்றது.

### “ஜகாத்தின் இரகசியம்”

இப்பூவுலகின் கண்ணுண்டான அறிவு படைத்த ஒவ்வொரு மக்கட்கும் ஆண்டவன்பால் அபூர்வ அபிமானமும் அளவு கடந்த பிரீதியும் இல்லையென யார்தான் வாய் கூசாது செப்பத்துணிவர்? அவ்வாறே அவனது அன்பும் தங்கள் ஹிருதயங்களில் குடிகொண்டிருக்கிறதென வாதாடித் திரிபவர்களும் இக்கலியுகத்தின் கண் காணப்படாமலில்லை. ஆனால் அஃது எம்மட்டில் உண்மையான தென்பதைத்தான் தெரிந்துகொள்வது அவசியம். அதற்கிணங்கவே எமது ஏகபராப இரட்சகன் அல்லாஹ் ஜல்லஷஉனுஹு வதஆலா அவ் வகுப்பினர்களை வெளியாக்கி வைக்கும் பொருட்டு, மானிட வர்க்கத்தின கட்கு ஏகப்பிரீதியான ஐசுவரியத்தில் ஓ சிறிய பங்கை “ஜகாத்” என ஏற்படுத்தியுள்ளான் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போலன்றோ?

எனவே இதற்கிணங்க மூன்றுவித வகுப்பினர் இஸ்லாத்தின்கண் தோன்றியுள்ளார்கள். முதலாவது மாபெரும் மஹான்கள் தங்கட்கு விதியாக்கப்பட்டதினும் அளவு கடந் ஒருங்கே தங்கள் பொருட்களை ஆண்டவன்பால் செலவு செய்து “ஸித்தீக்” (உண்மை படைத்தோர்) என்ற முதல்தரப் பட் பெற்றவர்கள் (ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீ (ரலி.) போன்றோர். மற்றொரு சாரார் தங்க



பாலுள்ள பற்றுள்ள பொருட்களை ஆண்டவனது பாதையில் அளித்துவிட சமயோசிதம் போல் நற்காரியங்களை ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணமாய் இருந்துவரும் பெரியார்கள். மூன்றாவது வகுப்பினர்கள் யாரென்று எண்ணுகின்றீர்கள்? அவர்கள்தாம் தங்கள்மீது விதியாக்கப்பெற்ற தங்கள் ஐஸ்வரியத்தில் நாற்பதிலொன்றை ‘ஜக்காத்’தாய் வினியோகிக்கின்றவர்கள்.

அறிவு படைத்த ஐயன்மீர்! இம்மூன்றாவது வகுப்பிலும் நாம் சேரவில்லையென்றால் என்னே! ஆண்டவன்பால் நாம் கொண்டுள்ள அன்பு!!

### மற்றோர் இரகசியம்

நமது சத்திய இஸ்லாத்தில் காணக்கிடைக்கும் ஆராய்ச்சிக்கொத்த கொள்கைகளில் நன்றி பாராட்டுதலும் ஒரு முக்கிய விதியாம். இதினிமித்த மன்றோ நன்றியறிதலை திரஸ்கரித்தவன் “காபிர்” என எமது மதம் பறைசாற்றுகின்றது. எனவே, ஐசுவரியம்படைத்த மக்கள் ஏழைகளின் வறுமையை உணர்ந்து தங்கட்கு அவ்வாறான ஏழ்மைத்தனம் இல்லாமைக்கு நன்றி செலுத்தும் பொருட்டே ஜகாத்தை ஏற்படுத்தியுள்ளது என்னே! எமது காருண்ய சத்திய சன்மார்க்கம்!! தன்மீது கடமையாக்கப்பெற்ற இத்தகைய ஜகாத்தைக்கொடுப்பதில் அதை எவ்விதம் கொடுக்கவேண்டும், யாருக்கு கொடுக்கவேண்டும், யாருக்கு கொடுக்கலாகாது என்பன போன்றவற்றை யறியாது அது நிறைவேறாத அநேக விதத்தில் சிலவு செய்துவிடுகின்றனர். எனவே அதன் சில முக்கிய கட்டளைகளை அடியிற் குறிப்பிடுகின்றோம். நேயர்கள் கவனித்து அதற்கேற்ப நடந்துகொள்வார்களாக.

### வெள்ளி, தங்க நாணயங்களின் “ஜகாத்”

$52\frac{1}{2}$ ரூபாய் ரொக்கம், அல்லது $52\frac{1}{2}$ தோலா நிறையுள்ள வெள்ளி நகைகள், அல்லது அத்தகைய நிறையுள்ள வெள்ளிக்கட்டிகள், அல்லது சற்றேறக்குறைய $11\frac{1}{2}$ பவுன் ரொக்கம், அல்லது $7\frac{1}{2}$ தோலா நிறையுள்ள தங்க நகைகள், அல்லது கட்டிகள் ஆகிய இவைகளில் ஒன்றைப் பெற்ற-பருவமடைந்த ஒவ்வொரு முஸ்லிமான ஆண் பெண் இருபாலரும் தனக்குண்டான குடும்ப அத்தியாவசியச் சிலவு, அணிந்து கொள்ள ஆடைகள், வாசஞ் செய்ய இல்லம், கடன்போன்ற பிறருக்குச் சேரவேண்டிய தொகைகள் போக எஞ்சிய பொருட்கட்கு வருடம் ஒன்றும் சென்று விடுமாகில் அவைகளில் நாற்பதிலொன்றை கீழ் விவரிக்கும் கூட்டத்தார்கட்கு “ஜகாத்” அளிப்பதாக நிர்ணயஞ் (நிய்யத்து) செய்தவனாய் அவ்வாறே செலுத்திவிடுவது அவசியமாகும்.

### “ஜகாத்” பெற அருகதையானவர்கள்.

ஜகாத்தை விதியாக்கும் தொகைகளான $52\frac{1}{2}$ ரூபாய் அல்லது $11\frac{1}{2}$ பவுன் போன்ற பொருட்களைப் பெற்றிராத “முஸ்லிம்” ஏழைமக்கள், கடனாளிகள் கைவசம் பொருளில்லாத பிரயாணிகள், ஜகாத் விதியாவதற்கு வேண்டிய திரவிய மில்லாத சகோதர சகோதரிகள், இவர்களது சந்ததியார்கள், சிற்றப்பன் அவரது மனைவி, இவர்களின் சந்ததியார்கள், மாமன், மாமிமார்கள், இவர்களது சந்ததியார்கள், மற்றும் தாய் வழியிலுள்ள ஏழைகள், தகப்பன் வழியிலுள்ள ஏழைபந்துக்கள், சுருங்கச் சொல்லுமிடத்து இயன்றவரை தன் குடும்பத்திலுள்ளவர்களும், அக்கம் பக்கத்து வீடுகளிலுள்ளவர்களுமான ஏழைகட்கு கொடுக்க வேண்டும். அயலூர் ஏழைகளைப் பார்க்கினும் உள்ளூர் ஏழைகட்கு கொடுத்தல் மிகவும் மேன்மை.

### “ஜகாத்” பெற அருகதை அற்றவர்கள்

தன் மாதா, பிதா, பாட்டன், பாட்டி, புத்திரன் புத்திரி, பேரன், பேத்தி, இஃதே போல் மனைவி தன் புருடனுக்கும் புருடன் தன் மனைவிக்கும் ஜகாத் கொடுக்கலாகா.

பள்ளிவாயில், பாடசாலை, பாலம், கிணறு, படித்துறை இவைபோன்ற பொது ஸ்தலங்கள் கட்டுவதற்காகவும் பிரேதத்திற்குண்டான அடக்கச் சிலவு, சுருங்கச் சொல்லுமிடத்து ஜகாத்தைப்பெற அருகதையான ஏழைகட்கென சொந்தப் படுத்தாத விதமாய் எக்காரியங்களுக்கும் பொதுவாக கொடுத்தலாகாது.

அன்புற்ற சகோதரர்காள்.!

ஆண்டவனால் நம்மீது கடமையாக்கப்பெற்ற “ஜகாத்” தின் விதங்களையும் அவைகள் கொடுக்கும் முறைகளையும் விபரமாகக்

கூறியுள்ளோம். ஆனால் நமது நாட்டில் பெரும்பணம் படைத்த அநேகர் அறியாத் தன்மையால் எத்தொகை கைவசமிருந்தால் ஜகாத் கொடுக்கக் கடமைப்பட்டவர்களாவார்களோ, அத்தொகை அவர்கள் வசமிருக்கும்போதும் அதற்குப் புள்ளிக் கணக்குப்பார்த்து 'ஜகாத்' கொடாமல் பாவிகளாய் விடுவதோடு ஆண்டவனது தண்டனைக்கும் பாத்தியஸ்தர்களாய் விடுகின்றனர். தவிர, பணம் படைத்து ஜகாத் கொடுப்பவர்களும் தங்களிடமுள்ள தொகைக்குச் சரிவரக் கணக்குப் பார்த்துக் கொடுக்காமல் யாருக்குக் கொடுக்க வேண்டுமென்பதை தெரிந்து கொள்ளாமல், 52½ ரூபாய் ஐவேஜ் உள்ளவர்களுக்கும் கொடுத்தும், தாங்கள் கொடுக்கும் " ஜகாத் " தின் புண்ணியத்தையும் இழந்து விடுகின்றனர். ஈதன்றி நமது நாட்டில் ஒரு கூட்டத்தார் அவர்கள் பணக்காரர்களோ ஏழைகளோ ஜகாத் வாங்குவதெற்கெனக் கிளம்பி அத்தொழிலில் ஈடுபட்டு அலைகின்றனர்; 52½ ரூபாய் ரொக்கமோ. அத்தொகைப் பெறுமானமுள்ள சாமான்களோ நம்மிடமிருக்கும் போது நாம் "ஜகாத்" வாங்குவது (ஹராம்) கூடாதென்று அவர்கள் கணப்போழ்தேனும் சிந்தித்துப் பார்ப்பதே கிடையா. தவிர, நமது தேசத்திலுள்ள பெண்மணிகள் அநேகமாக எல்லோரும் நகையுள்ளவர்களாகவே காணப்படுகின்றார்கள். அவர்களும் தங்களிடமுள்ள தங்க வெள்ளி நகைகளுக்கும் சரியாகக் கணக்குப் பார்த்து ஜகாத் கொடுக்காமலிருந்து பெரும் குற்றவாளியாய் விடுகின்றனர். ஆதலின் அல்லாஹ் தஆலா நம்மனைவரையும் ஒழுங்கான முறையில் ஜகாத் கொடுத்து அவனது கட்டளைகளைச் சிரமேற்தாங்கி நடந்து ஜெயம் பெற்ற கூட்டத்திலாக்கிவைப்பானாகவும்.

இங்ஙனம்,

(மௌல்வீ) ஆ சே. இ. அப்துஸ்ஸமத் சாஹிப்

(பாஜிலே தேவ்பந்து.)

---

# மார்க்க வினாவும் தீர்க்கமற்ற விடையும்

(காஹிர் நகர் ஜனாப் மு. க சையித் வரைவது)

சென்னையினின்றும் வாரம் ஒரு முறை வெளிவரும் தாருல் இஸ்லாம் என்னும் பத்திரிகையின் 5-12-30ந் தேதிய 'இதழ்' என் பார்வைக்குக் கிடைத்தது. அதில் சில நண்பர்களால் விடுக்கப்பட்டுள்ள மார்க்க வினாக்களுக்கு அப்பத்திரிகையின் முதல் அதிபர் 'முல்லா' பாக்கவீயால் வரையப்பட்டுள்ள விடைகளை நோக்குமிடத்து அவை நம் சுத்த சத்திய இஸ்லாமிய சட்டத்திற்கும் முஸ்லிம்களின் அனுஷ்டான முறைக்கும் முற்றிலும் விரோதமாகவே காணப்படுகின்றன. மேலும் அவ்விடைகளை நோக்கும் எவரும் அவை 'தீர்க்க மற்ற விடைகள்' என மதிப்பார்களேயன்றி 'மார்க்க விடைகள்' என மதியாரென்பது திண்ணம். ஏனெனின் மார்க்கக் கல்வியில் பாலர் பாடங்கற்று வருபவருங்கூட - இல்லை, முஸ்லிம் என தன்னைச் சொல்லிக்கொள்பவரும் அவ்வினாக்களுக்கு தக்க விடை பகர சற்றுந் தயங்காரென்பது பஹிரங்கமாயிருக்க 'மவ்லவீ' அதிபர் என்னும் இரு பட்டங்களைத் தரித்து வெளிக் கிளம்பியுள்ள இ முல்லா சாஹிபுக்கு விடையிறுக்கத் தெரிய மற் போனதே விந்தையினும் விந்தையாகும் நண்பர்களால் வினவப்பட்ட வினாக்களையு அதற்கு நம் முல்லா சாஹிப் அளித்திருக்கு விடைகளையும் அப்படியே நம் நேயர்களின் பார்வைக்கு கீழே தருகின்றேன்.

வினா:—ஒருவர் பிரயாணத்தின் போது காலரா முதலிய கொடிய நோய்கள் ஊரி பரவி இருக்கும்போதும், தெருக்களின் கோ களிலும், ரயில்வே ஸ்டேஷன்களிலும் சில மு லிம்களால் பாங்கு (அதான்) சொல்லப்படுகி றது. இம்மாதிரி சொல்வதற்கு நம் மார்க்க தில் ஆதாரம் உண்டா?



வினா:—2 தாய் மாமன் பெண்சாதியை மாமன் இறந்தபின் மருமகன் நிகாஹ் செய்து கொள்ள மார்க்கமுண்டா?

விடை:—1 ஒருவர் பிரயாணத்தின்போதும் காலரா முதலிய கொடிய நோய்கள் ஊரில் பரவியிருக்கும்போதும் வீதிகளின் கோடிகளிலும், ரயில்வே ஸ்டேஷன்களிலும், பஸ் ஸ்டாண்டுகளிலும் பாங்கென்னும் அதான் சொல்வதற்கு நம்மார்க்கத்தில் எவ்வித ஆதாரமில்லை என்றாலும் எப்படியாவது ஊரில் வந்திருக்கும் கொடிய வியாதியைத் துரத்திவிடுவது ஒரு நல்ல காரியந்தான். நாட்டில் வந்திருக்கும் முஸீபத்தான அபாய வியாதியைப் போக்குவான் வேண்டியே அதான். (பாங்கு) சொல்கின்றார்கள். யாரேனும் ஊரைவிட்டுப் பிரயாணம் செய்யும்போதும் இம்மாதிரியான பாங்கு என்னும் கூப்பாட்டை ஏன் சொல்லுகின்றனர்?

விடை:—2 இனி மாற்றாந் தாயை விவாகம் பண்ணிக்கொள்ளலாமா? என்னும்கேள்வி கேட்கும் காலம் நெருங்கிவிட்டால் போல் தோன்றுகிறது. ஆனால் நம் நாடு பழங்கால அரேபியாவன்று.

மது முஸ்லிம் சோதரர்காள்!

முதலாவது வினாவை கவனிக்குமிடத்து வ்வினாவிற் கூறியிருப்பவைகளுக் கிணங்க ரயாணத்தின் போதும், ஊரில் ஜின் ஷைத் ான் முதலியன பொது ஜனங்களைக் கஷ்டப் டுத்தும் சமயங்களிலும் கடை வீடு முத ன கட்டிடங்கள் வேகுஞ் சமயத்திலும், ரசவக் கஷ்டத்தின்போதும், இவையல்லாத வறு பல சங்கட-கஷ்ட நேரங்களிலும்'பாங் 'டன் 'இகாமத்து'ம் சொல்வது ஸுன் த்தா யிருக்கின்றது. உண்மை இவ்வாறி க்க நமது 'பாக்கவீ' சாஹிபு அவ்விதம் ங்கு சொல்வதற்கு நம் மார்க்கத்தில் ன்னவரின் மார்க்கம் வேறு போலும்) த்தகைய ஆதாரமும் இல்லை யென்று ைவதோடு நில்லாமல் "அந்தக் கூப் ட்டை ஏன் சொல்லுகின்றனர்" எனக் டித்து எழுதியிருப்பதைக் கவனிக்குங் ல் அன்னவரின் மார்க்கக் கல்வியும், தேச ணர்ச்சியும் எத்தன்மைத்தாயிருக்கும் என் ற்கு அவ்விடையே போதிய சான்றாகும். ர்க்கக் கல்வியும் தேச வுணர்ச்சியும் ஒரு துமற்ற ஒருவர் மார்க்கத் தீர்ப்பளிக்க ன்வந்தமையே இதற்குக் காரணமாகும். த்தகைய லக்ஷணத்தில்தான் தாமளிக்கும் மார்க்கத் தீர்ப்பிற்கு 5 ரூபா முன்பணம் வேண்டுமென்று விளம்பரஞ் செய்தார் போலும்!

இனி இரண்டாவது வினாவைக் கவனிக்குமிடத்து மாமன் மனைவியை மருமகன் நிகாஹ் செய்யலாமென்பது எமது மார்க்கத் தீர்ப்பும், உலகானுபவமுமாகும் ஆனல் நமது முல்லா சாஹிபு' இதற்கிறுத்திருக்கும் விடையோவெனின் மாற்றாந்தாயை நிகாஹ் செய்வதற்கொப்ப, கூடாத காரியமாகுமென பொருள்படும்படி விடை இறுத்துள்ளார் என்பது அவ்விடையை நோட்டமிடும் சாமான்யரான ஒவ்வொருவருக்கும் எளிதில் விளங்கும். ஆயின் 12-12-30 தா-இ-ல், "சந்தேக நிவாரணம்" என்ற மகுடத்தின் கீழ் "இனி மாற்றாந்தாயை விவாகஞ் செய்யலாமா? என்னும் கேள்வி கேட்குங் காலம் நெருங்கிவிட்டது என்று தான் எழுதியதின் கருத்து அவ்விதம் தாய் மாமன் மனைவியை நிகாஹ் செய்துகொள்வது வழக்கத்தில் இல்லை யென பொருள் கொள்ளவேண்டுமேயன்றி நிகாஹ் செய்து கொள்ளக்கூடாதென்று நாம் சொல்லியதாக தப்பர்த்தம் செய்துகொள்ள வேண்டாம்" என்று வரைந்திருக்கிறார். ஆனல் வழக்கத்திலில்லை யென்ற கருத்து அவரின் விடையின் எந்தப் பதத்தில் காணப்படுகிறதென்பதுதான் எமக்குப் புலனாகவில்லை. இவரின் அருத்தமற்ற இவ்விடைக்கு பொருத்தமற்ற அவ்விளக்கந் தான் என்னே, என்னே!!

மேலும் அன்னவர்கூறுவதேபோல் "வழக்கத்திலில்லை" யெனக் கருத்துக்கொண்டாலும் எத்தேசத்தில்—எம்மதஸ்தினரின் வழக்கத்திலில்லை என்பதைத் தெளிவுபடுத்திக் கூற அவர் கடமைப்பட்டவராவர். "பிழை திருத்தம்" என்ற மகுடமிட்டு இப்போலி சமாதானங்கூறினால் அன்னவரின் கண்ணியத்திற்குப் பங்கம் ஏற்பட்டுவிடுமன்றோ "சந்தேக நிவாரணம்" என்னும் இப்போலி சமாதானத்தை வரைய முன்வந்தார் போலும்!

தவிர இம்முல்லா சாஹிபாகிய முதல் அதிபரின் வெட்கங்கெட்ட கூற்று இம்மட்டோடென்று நினைக்கின்றீர்கள்? இல்லை! இல்லை!! 9-1-31ல் வெளிவந்துள்ள தா-இ-த்தில் நமக்கு நிகாஹ் பள்ளியில் செய்கிறது ஏற்றமனதா? அல்லது பெண் வீட்டில் செய்

கிறது ஏற்றமானதா? என்று கேட்கப்பட்ட வினாவிற்கு எந்தவிடத்தில் செய்வது சௌகரியமாகவும் ஹேதுவாகவும் இருக்கிறதோ அந்த இடத்தில் விவாகஞ் செய்தல் நலம்; இதுவும் ஓர் கேள்விதானே? என நமது முல்லா பாகவீ ஆச்சரியத்துடனும் பரிகாசத்துடனும் விடையை வாய்கூசாது விளம்பியுள்ளார். என்னே இவரின் மார்க்க விளக்கமும், புத்தியின் போக்கும்!!

பள்ளியில் நிகாஹ் என்னும் விவாகஞ் செய்வது எம்பெருமான் (ஸல்.) அவர்களின் அமிர்த வாக்கும், நம் மார்க்கத்தில் ஏற்றமுமான காரியமாகுமென்பதை அன்னவர் கிஞ்சித்தும் அறியவில்லை போலும்! இது
அறியாத விஷயத்தில் தலையிடுவது அறிவிலி
களின் செயலன்றோ? எமது மார்க்க ஞான
மற்ற ஒருவர் மார்க்கத் தீர்ப்பளிக்க முன்
வருவாராயின் அத்தீர்ப்பு சரியாகவோ,
அன்றி தவறாகவோ இருப்பினும் அன்னவர்
எம் இறைவனின் தண்டனைக் குள்ளாவாரென்
பதை இனியேனும் 'ஹாபிஸ்பாக்கவீ' நன்
குணர்ந்தடங்குவாராக!




## கிள்ளானில் வரவேற்பு.

(நமது விசேஷ நிருபரிடமிருந்து)

சென்னை ஹிபாஜத்துல் இஸ்லாம் காரியதரிசியும், டிரஸ்டியுமான ஆலீஜனாப் மவ்லானா மவ்லவீ S. A. முஹம்மத் அலீ சாஹிப் அவர்கள் 31-12-30 ல் இங்குவந்து சேர்ந்தார்கள். கனம் மவ்லானா அவர்கள் "தற்காலநிலைமை" என்னும் விஷயமாய் மஸ்ஜிதில் ஓரினிய சொற்பொழிவாற்றுவார்களென்று துண்டுப் பிரசுரங்கள் மூலம் அறிவிக்கப்பட்டிருந்தது. அதன்படி ஏராளமான பிரமுகர்களும், முக்கியஸ்தர்களும் அச்சபைக்கு விஜயஞ் செய்து குழுமியிருந்தார்கள். இஷாத் தொழுகைக்குப்பின் சபையின் நடவடிக்கைகள் துவக்கமாயின. துவக்கமானதும், ஜனாப் கோ. அ. பக்கீர் முஹம்மது சாஹிபு அவர்களால் மாண்புமிக்க தலைவர் மௌலானா அவர்களை சபையினருக் கறிமுகஞ் செய்யப்பட்டது. பின்பு ஜனாப் ஹாஜி, கா. உ. முஹம்மது இபுராஹீம்ராவுத்தர் அவர்களால் தலைவர் அவர்களுக்கு புஷ்ப மாலை சூட்டப்பட்டது. பின்னர் தலைவர் மௌலானா அவர்கள் ஆற்றிய அரிய சொற்பொழிவின் சாராம்சமாவது:....

சகோதரர்களே!

நமது இறைவன் நந்திருமறையின்கண் "தம்மிடத்தில் உண்மையான மார்க்கம் இஸ்லாமே" என நவின்றிருக்கின்றான். நபிமார்கள் (அலை) அவர்களும் மக்களுக்கு
"நீங்கள் இஸ்லாம் மார்க்கத்திலிருந்தே
மௌத்தாகுங்கள்" எனஉபதேசித்துச்சென்
றுள்ளார்கள். உலகம் பெரும் அந்தகாரத்தி
லிருந்தது. அவ் அந்தகாரத்தை நீக்குவான்
வேண்டி இறைவனால் அவ்வக்காலத்திற்கு
வேண்டிய சட்ட திட்டங்கள் ஏற்பட்டு
கொண்டே வந்தனவாயினும் இடையிடையே
அவை மறைந்துபோய்க்கொண்டுமிருந்தன.
கிறிஸ்துவர்கள் காலக்கிரமத்தில் பைபிளையு
மாற்றிவிட்டார்கள். மக்கள் மிருகங்களே
போன்று தங்கள் தங்கள் இஷ்டம்போ
நடந்து வந்தார்கள். மற்றெல்லாத் தேச
களைப் பார்க்கினும் 'அறபு' தேச
மிகச் சீர்கேடாயிருந்தது. அவ் அந்தகா
ரத்தை நீக்குவான்வேண்டி அக்காலை நம
றசூலேகரீம் (ஸல்.) அவர்கள் தோன்
அவ் அராபிய தேசத்தினரின் அந்தகார
த்தைப் போக்குவதற்காக ஆண்டவன்ற
அருள் வேதமான "குர்ஆன் ஷரீபை"
போதித்தார்கள். ஏக பரம் பொருளா
"ஹக்கு" தஆலாவும் "என்னுடைய நன்றி
உம்மீது நிறை பூரணமாக்கிவிட்டேன்" எ
கூறியுள்ளான். அக்காலத்தில் ஸஹாப
கள் (றலி.) அவர்கள் நாயகம் (ஸல்.) அவ
ளிடம் நேர்முகமாய் மார்க்கத்தைக் கேட்
தெரிந்து கொண்டார்கள். நாமோ வெனி
பிதுரார்ஜிதப் பொருளாக இஸ்லாம் மா
கம் கிடைக்கப் பெற்றிருக்கின்றோம். "தா
தேடாப் பொருளுக்கு மாற்றுமில்லை மதி
மில்லை" என்பதுபோல் நாமிருந்து வருகி



றோம். ஸஹாபாக்கள் (றலி.) அவர்களோ
வெனின், அவ்வாறில்லாமல் மிக்கக் கண்ணி
யத்தோடு மதித்து வந்தார்கள்.
"அல்லாஹ் (ஜல்) நம்மிடத்திற்கு நமது
வள்ளல் நாயகம் (ஸல்.) அவர்களை அனுப்பாம
லிருந்தால் நன்மை, தீமைகளைப் பகுத்த
றிந்து மேன்மையானதொழுகை ஜக்காத்து
போன்ற நன்மை பயக்குங் காரியத்தை நாம்
செய்யமாட்டோம்" என அப்துல்லா ஹிப்னு
ரவ்பா (ரலி.) அவர்கள் கூறியிருக்கின்றார்கள்
தீனுல் இஸ்லாமைத் தழுவியதால் எத்
தனையோ ஸீதேவிகள் நெருப்பில் போடப்
பட்டார்கள்; கொல்லப்பட்டார்கள். ஹஸரத்
பிலால் (ரலி) அவர்கள் கால் கையைத் தளை
ந்து வெய்யலில் போட்டு வேதனை செய்யப்
பட்ட பொழுது "யா அஹது," 'யா அஹது'
என்ற ஓர்மையின்பேரில் அறிவிக்கக் கூடிய
கலிமாவைச் சொன்னார்களே யன்றி இஸ்
லாத்தை விட்டார்களல்லர். நேர் முக
மாய் நம் உண்மை இஸ்லாம் மார்க்கத்தைத்
தெரிந்திருந்தமையால் அதை எவ்வளவு கண்
ணியமாக மதித்திருந்தார்கள். நாமோ, நம
க்கு அஃது தேடாப் பொருளா யிருப்பதால்
அதன் மகிமையை அறிந்து கொள்ளவில்லை.
"நாயகம் (ஸல்) அவர்களது குணம் யாதா
யிருந்ததென" உம்முல் மூமினீன் ஹஜ்ரத்
ஆயிஷா ஸித்தீக்கா (றலி.) அவர்களிடம் வின
விய போது "நாயகம் (ஸல்.) அவர்களின்
குணம் குர்ஆனாக யிருந்தது" எனவிடை
பகர்ந்துள்ளார்கள். நம் இறைவனும் "நிச்
சயமாக நீர் வலுப்பமான குணத்தை யுடைய
வர்" என நாயகம் (ஸல்.) அவர்களைப் புகழ்ந்
து பாராட்டிக் கூறியுள்ளான். அதன் கருத்
தாவது, நாயகம் (ஸல்) அவர்கள் குர்ஆனில்
கூறியுள்ள சட்ட திட்டங்கள் யாவையும் அப்
படியே நடத்திக்காண்பித்தார்கள் என்பதே.
அரசன், கூலிக்காரன், வியாபாரி, நீதிபதி, முத
லானவர்கள் நடந்துகொள்ளவேண்டிய முறை
களையும், சமாதானம், நற்குணம், பாவ மன்
னிப்பு முதலிய சகல விஷயங்களையும் குர்
ஆன் ஷரீபின் மேன்மையும் போதனையும்
வெகு தெளிவாக அறிவிக்கின்றன வென்
பதையும் எடுத்துக் காட்டியுள்ளார்கள். மே
லும் அதன் மூலம் சேனாதிபதியாயும் யுத்த
வீரராயும், சமாதான தயாளராயும் இருந்து
வந்தார்கள். 'பத்றுப்' போரில் குப்பார்
கள் முற்கூட்டியே போர் நடக்குமிடத்துக்கு

வந்ததனால் தங்களுக்கு வசதியான இடத்தைத் தெரிந்து கொண்டார்கள். நாயகம் (ஸல்.) அவர்களோவெனின்பின்வந்தபடியால் வசதிக் குறைவான வேறிடத்தில் தங்கும்படி நேர்ந்தது. முஸ்லிம்கள் 313 பேர்களே இருந்தார்கள். குப்பார்கள் ஆயிரத்துக் கதிகமுளர். அவ்வமயம் மழை வருஷித்தமையால் நபிகள் பிரான் (ஸல்.) அவர்கள் தங்கிய இடமான பள்ளத்தாக்கில் அதிகத் தண்ணீர் தேங்கிற்று. எதிரிகளாய குப்பார்கள் தண்ணீருக்காகத் தயங்கினார்கள். தயாளகுணம் பொருந்திய நாயகம் (ஸல்.) அவர்களோ "தாராளமாய் வந்து தண்ணீர் கொண்டுபோங்க"ளென அவர்களுக்கு உத்தரவு அளித்தார்கள். இதைப் பார்த்துங்கூட அவ்வன்னெஞ்சர்களான குப்பார்களுக்கு நாயகம் (ஸல்) அவர்களின் குணம் விளங்காமற் போய்விட்டது. நாயகம் (ஸல்.) அவர்கள் தங்கள் ஆயுட்கால முழுதும் தங்களைத்தொட்டும் பழிவாங்கியதே கிடையாது. இவ்வாறு நாயகம் (ஸல்.) அவர்களின் குணங்கள் குர்ஆன் ஷரீபாக இருந்தமையால் அவர்கள் சொல், செயல், குணம் யாவும் மின்னல் போல் பரவிக் கொண்டிருந்தன. குப்பார்கள் நாயகம் (ஸல்.) அவர்களை அதிகக் கஷ்டத்துக்குள்ளாக்கியும் பெருமானவர்கள் அவைகளைச் சகித்துக் கொண்டிருந்தார்கள்.

நாயகம் (ஸல்.) அவர்கள் மக்காவைவிட்டும் ஹிஜ்ரத்துச் செய்து நீர் வளம், நிலவளம் பொருந்திய 'மதீனாமுனவ்வரா' விற்குச்சென்றிருந்தபோதிலும் சிறப்புற்ற 'மக்காமுஅஜ்ஜமா' வின் புல்லின் வாசமானது தங்கள் மனதில் குடிகொண்டிருந்தது. கூடிய சீக்கிரம் 'இஹ்ராம்' கட்டியவர்களாய் மக்காவில் புகுவீர்களென கனவு கண்டார்கள். தவிர தாங்கள் ஹிஜ்ரத்துப் புறப்படுகையில் "உன் மீது வெறுப்புக்கொண்டு யான்செல்லவில்லை; அல்லாவின் கட்டளை இது; அப்படியன்றி உன்னை வெறுத்துப் போவது பெரும்பாதகமே" என 'கஅபாவைப்'பார்த்து திருவாய் மலர்ந்தருளிச் சென்றார்கள். நாயகம் (ஸல்.) அவர்களது மனதில் கஅபத்துல்லாவை 'உம்ராச்' செய்யவேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டிருந்தது. அக்காலை குப்பார்கள் தோல்வியடைந் திருந்தார்கள். அவர்கள் இஸ்லாத்தை அழித்துவிட வேண்டுமென்ற எண்ணங் கொண்டவர்களா யிருந்தபடியால் அவர்கள் சொல்வதுபோல் விட்டுக் கொடுக்க ஸஹா

பாக்களுக்குப் பிரியம் இல்லாமலிருந்தும்
குப்பார்கள் ்சொற்படி நாயகம் (ஸல்.) அவர்
கள் சமாதானஞ் செய்து கொண்டார்கள்.
இதனல் தீனுல் இஸ்லாமிற்கு முன்பிருந்
ததைக் காட்டினும் எத்துணையோ மடங்கு
அநுகூல முண்டாயிற்று.

சகோதரர்களே ! மேற்கூறியவாறு நாயகம்
(ஸல்.) அவர்களும் அவர்களின் அருமை
ஸஹாபாக்கள் (ரலி.) அவர்களும் அரும்பாடு
பட்டுத் தீனுல் இஸ்லாத்தைக் காப்பாற்றினர்
கள். இவ்வாறே நாமும் அவ்வழியைப் பின்
பற்றி நடப்பது அவசியமாகும். இத்தியாதி
காரியங்களி லீடுபட்டுழைக்க எல்லாம் வல்ல
இறைவன் நம் மனைவருக்கும் நல்லுதவி புரி
வானக !

இதே நன்னேக்கங் கொண்டே சென்னை
யின்கண், ஹிபாஜத்துல் இஸ்லாம் (இஸ்லாத்
தின் பாதுகாப்பு) சங்கம் நிறுவி ஓராண்டு
பூர்த்தியுற்று, அழகிய முறையில் நம் பரிசுத்த
சத்திய—இஸ்லாம் மார்க்கத்திற்கு இராப்பக
லாய் ஓயாமல் இணையற்ற ஊழியம் புரிந்து
வருவதை நீங்களெல்லீரும் நன்கறிவீர்கள்.
அச் சங்கத்தை, இதினும் பன்மடங்கு
மேம்பாடையும்படிச் செய்ய இதற்குத் தக்க
தோர் பண்டு அவசியம் என்பதையுணர்ந்த
சென்னைவாசிகளிற் சில நற்சிந்தையுடைய-
தயாள குணம் படைத்த கனவான்கள் பணந்
தந்து உதவி புரிந்துள்ளார்கள். அதற்குத்
தக்கதோர் மூலதனம் சேமித்து வைப்பது அவ
சியத்தினும் அவசியமாகின்றது. பிறமதஸ்
தினர் லட்சக்கணக்கில் நிதி திரட்டி வேலை
செய்து வருகின்றார்கள். யாங்கள் சமீபத்
தில் சாத்தன் குளம் மகா நாட்டிற்கு சென்
றிருந்தக்கால திருநெல்வேலியில் கண்தெரி
யாக் குருடர்களுக்கென கிறிஸ்துவர்களால்
ஒரு பள்ளிக்கூடம் ஏற்பாடுசெய்து அவர்கள்
அதில் கை நிதானத்தின் பேரிலேயே நெசவு
முதலிய தொழில்களைக் கற்று வருகின்றதை
கண்கூடாகப் பார்த்தோம். இதற்கு கவர்ன்
மெண்டாரும் உதவிபுரிந்து வருவதாக தெரி
கின்றது.

கனவான்களே ! நந்தேயத்தில் ஆரியர்
களின் தொல்லை ஒருபக்கல் இருந்து வருகிற
தெனினும், மற்றொருபுறம் காதியானி அஹ

மதியர்கள் கிளம்பி தங்களை ஸுன்னத்து வல்
ஜமாஅத்தைச் சேர்ந்தவர்களெனப் பறை
சாற்றிப் பாசாங்குஞ் செய்து பொது ஜனங்
களை யேமாற்றிவருகின்றனர். இத்தகைய தீய
பிரசாரங்களைத் தடுக்க நாம் செய்யவேண்டிய
வேலைகள் இன்னும் பல இருக்கின்றன. இதற்
கெல்லாம் தக்கதோர் பண்டு அவசியம்
வேண்டும்; இதை யுத்தேசித்து பர்மாவிற்
கும் மலாய் நாட்டிற்கும் ஒரு தூதுவக்கூட்
டம் புறப்பட ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.
இது பொழுது எங்கும் வியாபார வீழ்ச்சி
யேற்பட்டிருப்பதை முன்னிட்டு தூதுவக்
கூட்டம் புறப்படவில்லை. ஆண்டவன் இவ்
வீழ்ச்சியை விட்டும் மீட்சி பெறும்படிச்
செய்து நம் சங்கத்திற்குத் தக்கதோர் நிதி
ஏற்பட உதவி செய்தருள்வானக !

இந் நன்னேக்கத்தை அபிவிருத்திக்குக்
கொண்டு வருவதற்காகவே சங்கச் சார்பில்
“ஹிபாஜத்துல் இஸ்லாம்” என்னும் மாசிகை
வெளி வந்துலவுவது தாங்களெல்லீரும்
அறிந்ததே. ஆகவே தாங்களனைவரும் அவ்
அரும் மாசிகையை வாங்கிப் படித்துப் பயன்
பெறுவீர்களென ஆதரவு வைக்கின்றேன்.

மேலும், கம்பம் ‘இஷா அத்துல் இஸ்லாம்’
சங்கத்தின் மூலமாக இது வரை ஆயிர
பேர்கள் இஸ்லாம் மதத்தைத் தழுவியுள்
ளார்கள். அச்சங்க மூலமாக நம் முஸ்லி
களுக்குத் தக்க வசதிகள் செய்து கொடுக்கப்
பட்டு வருகின்றது இன்னம் உதவியிரு
தால் எவ்வளவோ பேர்கள் மனமு வந்
இஸ்லாம் மதத்தைத் தழுவக் காத்திரு
கிறார்கள். எனவே இவ்விதமான நற்காரிய
திற்கும் தாங்கள் அனைவரும் உதவி புரிவீ
களென நம்பி யிருக்கின்றேன்.

என்று பேசி முடித்த வுடன் ஜனுப் கோ
அ. பக்கீர் முஹம்மது சாஹிப் அவர்கள
கனம் தலைவர் மௌலான அவர்களுக்கு
மற்றுஞ் சபையோர்களுக்கும் வந்தனோபச
ரங்கூறப்பட்டு, இமாமவர்களால் ‘து
ஓதிய பின் சபையினர் யாவருக்கும் சிற்
ண்டி வழங்கப்பட்டு சுமார் $11\frac{1}{2}$ மணிக்கு
சபையின் நடவடிக்கைகள் இனிது பூர்த்
யுற்றது.



பம்பாய்.

ஜனுப் ஸையித் முனவ்வர் சாஹிபு பஹதூர்
B. A, M. L. C, J. P. அவர்களுக்கு உபசார
வைபவம்.

காயல் பட்டணம் ஆலி ஜனுப் ஹாஜி பி.
எஸ். முஹம்மது அப்துல்லா ஆலிம் சாஹிப்
அவர்களின் காரியாலயமாகிய பம்பாய் ஸத்
ரியா பஜார் 167-நெ. மாளிகையில் 4-1-31
ஞாயிற்றுக்கிழமை மாலை $3\frac{1}{2}$ மணிக்கு ஒரு உப
சார வைபவம் நடை பெற்றது. குறிப்பிட்ட
நேரத்திற்குள் பம்பாய் நகரின் கண்ணு
ணுள்ள பிரபல வர்த்தகர்கள் தனவந்தர்கள்
கல்விமான்கள், கவர்ன்மெண்டு உத்தியோ
கஸ்தர்கள், பட்டவர்த்தனர்கள் திருநெல்
வேலி பேட்டை வியாபாரிகள் காயற்பட்ட
ணம் வர்த்தகர்கள் முதலிய கனவான்கள்
உள்பட ஏராளமாய் விஜயஞ் செய்திருந்தார்
கள். அம் மஹாசபைக்கு அல்லா ரக்கய்யா
ரஹ்மத்துல்லா சாஹிப் ஜே. பி. அவர்கள்
அக்கிராசனப்பதவியை வகித்து சபையைக்
கொண்டாடி சில அரிய வார்த்தைகள் மொ
ழிந்து ஆசனத்திலமர்ந்தார்கள். பின்னர்
கனம் ஹாஜி, பி. எஸ். முஹம்மது அப்
துல்லா ஆலிம் சாஹிப் அவர்கள் சார்பாக
அவர்களின் சக புத்திரர் பி. ஏ. முஹம்மது
ஸதகத்துல்லா சாஹிபு அவர்கள் உபசாரப்
பத்திரம் ஒன்றை கனம் ஸையித் முனவ்வர்
சாஹிப் அவர்களுக்குப் படித்து சமர்ப்பித்
தார்கள். அவ் வுபசாரப்பத்திரத்திற்கு ஜனுப்
ஸையித் முனவ்வர் சாஹிப் அவர்கள் தமிழி
லும், உர்துவிலும் தக்க பதில் கூறுகையில்:—
பி. எஸ் ஹாஜி முஹம்மது அப்துல்லா
ஆலிம் சாஹிபு அவர்களுடைய ஏஜெண்டு
எஸ். எஸ். திவான் முஹ்யித்தீன் ஜனுப்
ஸையித் முஹம்மத், ஜனுப் ஸதக்கத்துல்லா,
ஜனுப் எம். ஏ. மலிக்சாஹிபு முதலானவர்க
ளுக்கு வந்தனமளித்து தமக்கு மிக்க வைபவ
மாக ஒரு வரவேற்புப்பத்திரம் வாசித்துக்
கொடுக்கப்பட்டதைப் பாராட்டிப் பேசி
தமக்காக இச் சிறப்புற்ற விருந்து ஏற்பாடு
செய்தமைக்காக மனமகிழ்ந்த வந்தனம் அளி
ப்பதாகக் கூறினர், “சமூக ஊழியம் செய்யும்
ஒவ்வொருவரும் பிரதிபலனைக் கோராமலும்
இவ்விதப் பாராட்டுதலையும் போற்று தலை
யும் கவனியாமலும் ஊழியம் செய்வதே
தம் கடமையென கருதவேண்டும். இவ்வித

மாக இதரர்களுடையபாராட்டுதலையும்,போற்
றுதலையும் கவனியாமல் இவர்கள் தம் வேலை
யைச் செவ்வனே நடத்திக்கொண்டு செல்
வார்களாகில் இதரர்களின் பாராட்டுதலும்
போற்றுதலும் நாளடைவில் தானகவே,
வந்து சேரும். சென்றமுறை நான் சட்ட
சபையிலிருந்தபோது நான்செய்யமுடியாமல்
எஞ்சிநின்ற வேலையை இப்பொழுது நான்
நாமினேஷன் செய்யப்பட்டிருப்பதால் பூர்த்
திச் செய்ய எனக்கு சௌகரியமா யிருக்கும்
சட்டசபையிலும், போர்ட் ட்ரெஸ்ட்டி’லும்
நான் தொழிலாளருடைய பிரதிநிதியாக நிய
மிக்கப்பட் டிருக்கின்றேன். நான் இவ்வேலை
யைச் செய்து முடிப்பதிலும் தொழிலாளர்க
ளுடைய நலனைக் கவனிப்பதிலும் என்னு
டைய கவனத்தைச் செலுத்துவேன்” என்று
கூறினர்.

அதன்பின் ஜனுப் எஸ். கே. அஹ்மத்
மீரான் சாஹிபு எம். ஏ, பி. எல். அவர்கள்
ஆங்கிலத்தில் கனம் ஸையித் சாஹிபு அவர்
களைப் பாராட்டிப் பேசினர்.

பின்னர் ஜனுப். M. A. மலிக் சாஹிப்:—

அக்கிராசனதிபதியே! பிரதானிகளே! ஒரு
ஜாதி அல்லது ஒரு சமூகம் முன்னேற்ற
மடைவதற்குரிய சகல உத்தம காரியங்களி
லும் சித்திபெற வேண்டுமானல், அத்தகைய
சமூகத்துள் அதிசயிக்கத்தக்க குறிப்பான
சில அற்புத மேதாவிகள், மஹா ஞானிகள்,
தியாக சொரூபிகள், இருந்தே தீரவேண்டும்.

அத்தகைய மேதாவிகளைக் கொண்டிராத
சமூகம் எதுவானலும் சரியே கோனில்லாத
ஆடுபோல் சிதறுண்டு, கெட்டழிந்து போகு
மேயொழிய அது ஜீவித்திருக்க முடியாது.

சமூகப் பிரதானிகள், எத்தகைப்பட்டவர்
எவ்வாறு சித்தமுடையோராய் இருப்பர் என்
பதைப்பற்றி, தெரிந்துக்கொள்ளப் பிரிய
முடையோர், உலகத்திலுள்ள வேறெந்த
சரித்திரத்தையேனும், புராணங்களையேனும்,
புரட்டிப் பார்க்கவேண்டியதேயில்லை. சகல
லோகங்களுக்கும், சன்மானமாய்க் கிடைத்தி
ருக்கும் ஆண்டவனுடைய திருவேதத்தைத்
திருப்பிப் பார்ப்போமானல் அவர்களுடைய
அற்புத லக்ஷணங்களும் அவர்களுடைய
தியாகச் செய்கைகளும், அதனல் சமூகம்
அடையும் பலனும், இன்னின்னவென நாம்
செவ்வனே தெரிந்துக்கொள்ளலாம்.

அத்தகைய மேதாவிகளைப்பற்றி பிரஸ்தாபிக்கும் ஆண்டவனுடைய திருவாக்கை திருக்குறு ஆனிய பாஷையிலேயே உச்சரித்து, அதன் பொருளை விளக்கி இந்த சபைக்கு உற்சாகமூட்ட விரும்புகிறேன்.

(1) கற்களில், சிலவற்றுள் ஆறுபோல் பெருகி, நீர் ஓடிச் செல்லத்தக்க, இயற்கை சுபாவத்தைக்கொண்ட கற்களுமுண்டு.

(2) கற்களில் சில, வெடித்துப் பிளந்து அவற்றினின்றும் நீர் வழிந்து செல்லத்தக்க குணமுள்ள கற்களுமுண்டு.

(3) கற்களில் சில உருகிப்பாயும் சித்தமுடைய கற்களுமுண்டு.

மேற்கூறிய மூவகைப்பட்ட வாக்கியங்களும் திருக்குறு ஆன் அருளியிருக்கும் திருவாக்கின் கருத்துக்களேயாம்.

திருக்குறு ஆன், "கற்களைக்" கொண்டு உவமானித்துக் கூறியிருப்பதானது, மூவகைப்பட்ட "ஹிருதய சித்தமுடைய" மேதாவிகளைப் பொறுத்ததென்பதை இந்த சமூகத்தால் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆகவே முன்னேற்றத்திற்கோ, இம்மை மறுமையின் வெற்றிக்கோ, தாகித்திருக்கும் ஒரு சமூகம் அல்லது ஒரு ஜாதி, ஜீவதண்ணீர் பொங்கிவழியும் இத்தகைய, பேராற்றையடுத்து, தாகம் தீர்த்துக்கொண்டாலொழிய, அந்த சமூகம் ஜீவித்து இருக்க முடியாது என்பது நிக்ஷயம்.

எனவே, இத்தகைய மேதாவிகளை, ஒவ்வொரு சமூகமும் கொண்டாடி புகழவேண்டியதும், அவர்களுக்கு உற்சாகத்தை மூட்டுவதும், சமூகத்தின்மீது ஏற்பட்ட விசேஷக் கடமையே யாகும்.

இப்போது இங்கே, ஆஸன மமர்ந்திருக்கும் ஸ்ரீமான் செய்யித் முனவ்வர் சாஹிப் பஹதூர் B. A, M. L., C, J. P. அவர்கள் மேற்கூறிய மேதாவிகளின் கிளைப்பட்டவர் என்றும் மஹத்தான இந்தச் சபையில் காயல் பட்டணம், மௌலவீ, ஹாஜி கனம். பா. சு. முஹம்மத் அப்துல்லா சாஹிப்அவர்கள் சார்பாக அவர்களுடைய சக புதல்வரான, கனம் P.A.முஹம்மத் சதக்கத் துல்லா சாஹிபால், படித்து சமர்ப்பித்த உபசாரப் பத்திரத்தின் மூலமாயும் அதை அனுசரித்து சென்னை அட்வகேட் S. K. அஹமத் மீருன் சாஹிப் M. A. B. L. மலையாள முஸ்லிம்ஜமா அத்து செக்ரெட்டிரியான கனம் T. C. மியான் சாஹிப், சேட் ஹாஜி அல்லாரக்கய்யா சாஹிப் முதலிய பல பிரமுகர்கள் செய்த அரிய பிரசங்கங்களின் வாயிலாயும் ருஜூப்படுத்துவதோடு கனம் செய்யித் சாஹிப் அவர்கள் தேசத்துக்கும் தேச மஹா ஜனங்களுக்கும் செய்துவந்த சேவையைப் பாராட்டுவதற்காக பம்பாய் நகரத்திலுள்ள பல கற்றறிந்த மேதாவிகளும், வர்த்தகர்களும், தனவந்தர்களும் அத்துடன் நமது திருநெல்வேலி ஜில்லா வர்த்தகப் பிரமுகர்களும், ஒன்றுசேர்ந்து மகிழ்ந்து கொண்டாடுவதிலிருந்து, கனம் மௌல்வீ, P.S. முஹம்மத் அப்துல்லா ஹாஜி சாஹிப் அவர்கள் ஒரு தலைவருக்கு, ஒரு சமூகம் செய்யவேண்டிய கடமையைச் செய்து முடித்தார்கள் என்றுசொல்ல, நான் கொஞ்சமும் தயங்கேன். தயங்கேன்.

இந்த வைபவத்தில் வந்து சேர்ந்து கொள்ள கனம் மௌலவீ சாஹிப், அவர்களுக்கு சந்தர்ப்பம் கிடைக்காமல், அதற்கான வேண்டிய காரியங்களை செய்து முடிக்க பம்பாயில் அவர்களுக்குப் பிரதிநிதியாகவும், காரியஸ்தராகவும், நியமிக்கப்பட்டிருக்கும் கனம் S. S. திவான் முஹையதீன் சாஹிப் அவர்களுடையவும் கனம் M. V. S. ஹபீப் முஹம்மத் சாஹிப், கனம் P. அப்துர் ரஷீத் சாஹிப் இவர்களுடையவும் அரும் பெரும் முயற்சிக்காக நான் மிக்க மனதாரப் பாராட்டுகின்றேன்.

கனம் மௌலவீ சாஹிப் அவர்கள் தங்கள் ஆயத்தமின்மையால், கனம் செய்யது சாஹிப் அவர்களுக்கு உபசாரப் பத்திரம் வாசித்துச் சமர்ப்பிக்க, தங்கள் சகபுத்திரர், கனம் P. A. முஹம்மத் சதகத்துல்லா சாஹிபையும் மஹா சபையில் தங்கள் பிரசன்னத்துக்காக தங்கள் செல்வப் புதல்வர் கனம், செய்யித் முஹம்மத் சாஹிபையும், நியமனஞ் செய்து சபையை மகிழுறச் செய்ததும் போற்றத்தக்கதே.

கனம் செய்யித் சாஹிப் அவர்களின் இவ்வுபசார வைபவத்திற்கு அக்கிராஸன பதவி வகித்த ஹாஜி அல்லாரக்கியா சாஹிப் J. P. அவர்களுக்கும் மற்றும் பிரதானிகள் யாவருக்கும் எனது மனப்பூர்வமான வந்தனமளிக்கின்றேன் எனப் பேசி முடித்தார்.



பின்னர், T. S. மாயன் சாஹிபு ஆங்கிலத்தில் கனம் சையித் சாஹிப் அவர்களின் அரும் பெருங் குணங்களைப்பற்றி சபையினருக்கு விளக்கிக் காட்டினர், பின்னர் S. S. திவான் முஹ்யித்தீன் சாஹிபு அவர்கள் எழுந்து "ஸ்ரீமான் சையித் சாஹிபு" அவர்கள் எங்கள் மாகாணவாசி; இவர்கள் விசேஷமாக பம்பாய் முஸ்லிம்களின் முன்னேற்றத்துக்கென அரும்பாடுபட்டு வந்ததை நாம் பாராட்டுகின்றோம். இவர்களை பம்பாய் சட்டசபைக்கு மேம்பராக பம்பாய் மே—த, கவர்னர் நியமித்துக்கொண்டமை போற்றத்தக்கதாகும். இவர்களையும் இவர்களின் குடும்பத்தார்களையும் காயல் பட்டணமிருந்து வரும் நமது சேட் கனம் ஹாஜி. P. S. முஹம்மது அப்துல்லா ஆலிம் சாஹிப் அவர்கள் செவ்வையாகத் தெரிந்தவர்கள். இவர்களுடைய அரும் பெருஞ் சேவையைக் கொண்டாடி அவர்களுக்கு நமது மாகாணவாசிகள் சேர்ந்து நமது 'சிறப்பில் உபசாரப் 'பத்திரமொன்று வாசித்துக்கொடுக்க விரும்பியபடி நான் அதற்குரிய முயற்சிகளைச் செய்து நடத்தும் இவ் வைபவத்திற்கு தாங்களெல்லீரும் கூடி எங்களை மகிழ்வித்தமைக்காக தங்களுக்கு எங்கள் அகமகிழ்ந்த வந்தனத்தைச் செலுத்துகின்றோம்.

---

## காலண்டர்கள் வரவு

C. H. கில்ருமுஹம்மத் & CO :— சிங்கை பிரபல கைலி வியாபாரியாகிய மெஸ்ஸர்ஸ் C. H. கில்ரு முஹம்மத் & கம்பெனியாரது தினம் ஒருஷீட் கிழிக்கக்கூடிய 1931ம் வருஷத்துக் காலண்டர் ஒன்று சென்னையிலுள்ள ஷெ யாரின் ஹெட் ஆபீஸிலிருந்து வரப்பெற்றோம். அக் காலண்டரின் மத்தியில், அவர்களின் வியாபாரக் குறியாகிய 'குர்ஸீ'யின் படமொன்று மிக்க நேர்த்தியான முறையில் வரையப்பட் டிருக்கின்றது.

S. M. ஸுலைமான் சாஹிப் & CO :— சென்னை தம்புசெட்டித்தெரு 58 நெ. எண்ணியுள்ள பிரபல கைலி வியாபாரியும், கமிஷன் ஏஜெண்டுமான மெஸ்ஸர்ஸ் S. M. சுலைமான் சாஹிப் & கம்பெனியாரிடமிருந்து, இங்கிலீஷ், அறபு, தமிழ் ஆகிய மூன்று பாஷைகள் அமைந்ததாகவும் தினம் ஒவ்வொரு ஷீட் கிழிக்கக் கூடியதாகவும் உள்ள காலண்டர் ஒன்று வரப்பெற்றோம். அதன் அட்டையில் பார்ப்பவர்களின் கண்களை கவரத்தக்க விதமாக 'கிட்டா மஸ்ஜிதி'ன் அழகிய படம் ஒன்று வரையப்பெற்றிருக்கிறது.

K. M. முஹம்மது கவ்ஸ் அண்டு கோ :— பினாங்கு, பிரபல வர்த்தகர்களான மெஸ்ஸர்ஸ் K. M. முஹம்மது கவ்ஸ் & கம்பெனியாரிடமிருந்து 'ஷீட்' காலண்டர் ஒன்று வரப்பெற்றோம். அதில் அவர்களின் பிராஞ்சு ஆபீஸ்களான ரங்கூன், மதராஸ், நாகப்பட்டணம் முதலிய வியாபார ஸ்தலங்களின் முழு விலாசங்களும் வெகு தெளிவாக குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

R. E. முஹம்மத் காஸிம் அண்டு கோ :— சிங்கப்பூர், பினங்கு கிள்ளான், ரங்கூன், மதராஸ், கல்கத்தா முதலிய விடங்களின் பிரபல வியாபாரியாகிய மெஸ்ஸர்ஸ் R. E. முஹம்மத் காஸீம் கம்பெனியாரின் காலண்டர் ஒன்று, சென்னையிலுள்ள அவர்களது பிராஞ்சு ஆபீஸிலிருந்து வரப்பெற்றோம். அதன் அட்டையில் கிள்ளானிலுள்ள அவர்களின் தலைமை ஆபீஸ் கட்டடம் மிக்க அழகிய முறையில் பொறிக்கப்பட்டிருப்பது மனதைக் கவரத் தக்க விதமா யிருக்கிறது.

A. M. அப்துல்லா சாஹிப் அண்டு கோ :— சிங்கப்பூர், மார்க்கெட் ஸ்ட்ரீட், பிரபல வர்த்தகரும் கமிஷன் ஏஜெண்டுமான மெஸ்ஸர்ஸ் A. M. அப்துல்லா சாஹிப் கம்பெனியாரின் ஷீட்காலண்டர் ஒன்று சென்னையிலுள்ள ஷெயாரின் பிராஞ்சு ஆபீஸ் ஆண்டர்ஸன் தெரு மெஸ்ஸர்ஸ் A. M. அப்துல்லா சாஹிப் அன்ஸன்ஸ் அவர்களிட மிருந்து வரப்பெற்றோம்.

M. A. முஹம்மத் அலீ சாஹிப் அண்டுகோ:- சென்னை தம்புசெட்டித் தெரு, 63 நெ. எண்ணிலுள்ள பிரபல கைலிவியாபாரியாகிய மெஸ்ஸர்ஸ் M. A. முஹம்மத் அலீ சாஹிப் கம்

பெனியாரிடமிருந்து, இங்லீஷ், அறபு, தமிழ், ஆகிய மூன்று தேதிகளும் மூன்று வர்ணங்களில் நேர்த்தியாக அச்சிடப்பட்டு மாதம் ஒன்றுக்கு ஒருஷீட் கிழிக்கக்கூடிய காலண்டர் ஒன்று வரப்பெற்ஞேம். அதில் அவர்களின் வியாபாரக் குறியாகிய துர்யாம்பழமும், டாலரும், பிஞங்கிலுள்ள அக்கம்பெனியின் பிராஞ்சு ஆபீஸின்முழுவிலாசமும் குறிப்பிடபெற்றிருக்கின்றன.

S. E. S. அப்துல் கரீம் & பிரதர்ஸ் :— சென்னை அங்கப்ப நாய்க்கன் தெரு, பிரபல கைலி வியாபாரியாகிய மெஸ்ஸர்ஸ் S. E. S. அப்துல் கரீம் & பிரதர்ஸ் அவர்களிடமிருந்து அறபு, இங்கிலீஷ், தமிழ், ஆகிய 3 தேதிகளும் 3 கலர்களில் அச்சடிக்கப்பட்ட காலண்டர் ஒன்று வரப் பெற்ஞேம். அதில் அவர்களின் வியாபாரக் குறியாகிய துருக்கித் தொப்பியின் படமும் பிஞங்கிலுள்ள அவர்களின் பிராஞ்சு ஆபீஸின் விலாசமும் பொறிக்கப்பட்டிருப்பதுடன் பல விசேஷ தினங்களைத் தனிப்பட தெரிவிக்கக்கூடிய விதத்தில் இணைக்கப்பட்டதாயும் மாதம் ஒருஷீட் கிழிக்கக்கூடிய அழகிய காலண்டராயும் காணப்படுகிறது.

M. M. முஹ்யித்தீன் தம்பி & CO :— சென்னை அங்கப்ப நாய்க்கன் தெரு, பிரபல தோல் வியாபாரியும் கமிஷன் ஏஜெண்டுமாகிய மெஸ்ஸர்ஸ் M. M. முஹ்யித்தீன் தம்பி அண்டு கம்பெனியா ரிடமிருந்து அறபு இங்கிலீஷ், தமிழ் ஆகிய மூன்று தேதிகளும், 3 வர்ணங்களில் அச்சிடப்பட்டதாயும் மாதம் ஒரு ஷீட் கிழிக்கக்கூடியதாயும் உள்ள காலண்டர் ஒன்று வரப்பெற்ஞேம். அதுமிக நேர்த்தியாகக் காணப்படுகிறது.

S. M. K. ஷாஹுல் ஹமீது அண்டு கோ:- சென்னை அங்கப்பநாயக்கன் தெரு பிரபல ஜவுளி அண்டு தேயிலை வியாபாரியாகிய மெஸ்ஸர்ஸ் S. M. K. ஷாஹுல் ஹமீது கம்பெனியாரிடமிருந்து அறபு, தமிழ், இங்கிலீஷ் ஆகிய மூன்று தேதிகளும், 3 கலர்களில் அழகிய முறையில் பொறிக்கப்பட்டு மாதம் ஒருஷீட் கிழிக்கக்கூடியதாயுள்ள காலண்டர் ஒன்று வரப்பெற்ஞேம். அதில் அவர்களின் வியாபாரக் குறியாகிய ஹெச். டி. துருக்கித் தொப்பியின் அழகிய படம் சித்தரிக்கப்பட்டிருப்பதுடன் 'ஞாபகக் குறிப்பு'க்காக மெமோவும் அமைக்கப்பட்டிருக்கிறது.

ஹாஜி M. M. காதிர் பக்கீர் ராவுத்தர் & Co:—ரங்கூன், மதராஸ் நகர்களின் பிரபல்ய வர்த்தகரான மெஸ்ஸர்ஸ் ஹாஜி எம். எம். காதிர் பகீர்ராவுத்தர் அண்டுகம்பெனியாரின் சென்னையிலுள்ள சைஞபஜார் 21 நெம்பர் எண்ணிலுள்ள அவர்களின் வர்த்தக ஸ்தலத்திலிருந்து அறபு, இங்கிலீஷ் தமிழ் ஆகிய மூன்று தேதிகளும் 3 கலர்களில் பொறிக்கப்பட்ட காலண்டர் ஒன்று வரப்பெற்ஞேம். அதன் மத்தியில் அவர்களின் வியாபாரக்குறியாகிய பிறையும் அதன் இருபுறங்களில் அவர்களின் முக்கிய வியாபாரச் சாமான்களான குடையும், பனியனும் மிக நேர்த்தியாய் அச்சிடப்பட்டிருப்பதுடன் ஞாபகக் குறிப்புக்காக மெமோவும் அமைக்கப்பட் டிருப்பது கண்களைக் கவரத் தக்கதாயும் மாதம் ஒரு ஷீட் கிழிக்கக்கூடியதாகவு மிருக்கிறது.

சுகரசம் அண்டு கோ:—ரங்கூன் மங்கமாரி வீதி 385 நெம்பரில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள சுகரஸம்' கம்பெனியாரின் புரோப்ரைட்டரான மவ்லவீ முஹம்மதுயஃகூப் சாஹிபு அவர்களிடமிருந்து இங்கிலீஷ், அரபு, தமிழ் பர்மா, ஆகிய 4 தேதிகளும் பொறிக்கப்பட்டிருப்பதுடன் அவர்களின் வியாபாரச் சரக்காகிய சுகரஸத்தின் குணத்தையும் மேன்மையும் மற்றும் அங்கு கிடைக்கக்கூடிய சாமான்களையும் விவரமாகக் குறிப்பிடப்பட்டுள்ள காலண்டர் வரப்பெற்ஞேம்.

ஏ. எஸ். இஸ்மாயில் சாஹிப் அண்டு கோ:- ரங்கூன், பெகு முதலிய ஸ்தலங்களின் பிரபல வியாபாரியும் கமிஷன் ஏஜண்டுமாகிய மெஸ்ஸர்ஸ் ஏ. எஸ். இஸ்மாயில் சாஹிப் கம்பெனியாரிடமிருந்து அறபு, ஆங்கிலம், தமிழ் ஆகிய 3 தேதிகளும் 3 வர்ணங்களில் அச்சடிக்கப்பட்டதாயும் மாதம் ஒரு ஷீட் கிழிக்கக் கூடியதாயும் உள்ள காலண்டர் ஒன்று சென்னை கந்தப்பசெட்டித் தெருவிலுள்ள அவர்களின் பிராஞ்சு ஆபீஸிலிருந்து வரப்பெற்ஞேம். அதன் ஓரத்தில் தேதிவாரியாய் நாள் குறிப்புக்காக இடம் விடப்பெற்றிருக்கின்றது.

நவீன கதா புக் டிபோ:—ரங்கூன், மங்கமாரி வீதி, நவீன கதா புத்தகசாலையாரிடமிருந்து ஆங்கிலம், தமிழ், ஆகிய இருதேதிகளும் ஒவ்வொரு மாதத்தின் ஷீட்டும் ஒவ்வொரு அழகியகலரில் அச்சடிக்கப்பட்டதாயும், மாதம் ஒவ்வொருஷீட்டு கிழிக்கக்கூடியதாயும் அமைக்கப்பட்டிருக்கிறது. அதில் ஒவ்வொரு ஷீட்டின் கீழ்ப் பலபெரியார்களின் பொன் மொழிகளும் மக்களுக்குப் பிரயோசனந் தரத்தக்க ஹிதோபதேசங்களும் பொறிக்கப்பட்டிருக்கின்றன.





கே. நாகூர் மீரா அண்டு ஸன்ஸ்:—ரங்கூன் சைஞ வீதி, சூரத் பஜார் இவைகளின் இடை நாகரி பிரஸ் புத்தகசாலையாரிட மிருந்து தமிழ், ஆங்கிலம், பர்மா ஆகிய 3 தேதிகளும் அச்சடிக்கப்பெற்ற இரு காலண்டர்களும், பாக்கட் டைரி 1-ம்வரப்பெற்ஞேம் அவ்விரு காலண்டர்களும் மாதம் ஒருஷீட் கிழிக்க கூடிய விதத்தில் ஆக்கப்பெற்றிருக்கின்றது.

---

# மௌலானா முஹம்மத் அலீ

நம்மவர்களின் உரிமைகளைப் பெறுவான் வேண்டி லண்டன்மா நகர் சென்றிருந்த நம் உண்மைத் தலைவராய மௌலானா அவர்கள் சென்ற ஜனவரி மாதம் 4-ந் தேதியன்று காலை சுமார் 9-30 மணிக்கு காலஞ் சென்றனர். 'மர்ஹூம்' அவர்களின் ரூஹ்' (ஆவி) அடங்கும்வரை இந்து-முஸ்லிம் பிரச்சினையைப் பற்றியே உழைத்து வந்தார்கள். மௌலானா ஷௌகத் அலீ அவர்கள்'அயர்லாண்டு சென்றிருந்தமையால் தமது அருமைச் சகோதரரோடு இருதிக் காலத்தில் வார்த்தையாட இயலாமற்போனது வருந்தற்குரியதாகும். எனினும் அன்ஞர் அன்று காலையில் தான் வந்து சேர்ந்தனர். எல்லா இந்தியப் பிரதிநிதிகளும் துக்கம் பாராட்டினார்கள்; தங்கள் மரியாதையை மௌலானா அவர்கள் மரித்த இல்லம் சென்று துக்கத்துடன் செலுத்தினர்கள். மௌலானா மர்ஹூம் அவர்களது பிரேதம் கண்ணுடியால் மூடப்பெற்ற பெட்டியில் லண்டனில் உள்ள வோகிங்' மஸ்ஜிதுக்கு எடுத்துச் செல்லப்பெற்றது. அதுகாலை மௌலானா ஷௌகத் அலீ அவர்களும், உலகத்தில் பெரும் செல்வம் படைத்த இந்தியச் சிற்றரசர்களும், இந்தியப் பிரதிநிதிகளும், லண்டனில் பயிலும் இந்திய மாணவர்களும், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சார்பாக, லார்டு சாங்கே, வெட்ஜ்வுட்பென் முதலானவர்களும் குழுமி யிருந்தனர். ஜனஸாத் தொழுகை' வோகிங் இமாமால் நடத்தப் பெற்றது அதுகாலை 'வீரத்தில் தலைசிறந்த ஓயா உழைப்பினல் ஓய்ந்த இவ் ஆத்மாவிற்காக இங்குள்ள அனைவரும் இறைவன்பால் இறைஞ்சுமாறு கேட்டுக் கொள்ளுகின்றேன், என்று மௌலானா ஷௌகத் அலீ கூறவும், எல்லோரும் அவ்வாறே புரிந்தனர். மர்ஹூம் மௌலானா அவர்களை ஜெருசலேம் பட்டினத்தில் அடக்கம் செய்வதாக தீர்மானிக்கப் பெற்றது. இதன் சிலவுத் தொகையை முற்றிலும் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் ஒப்புக்கொண்டுள்ளனர். இத்தீர்மானத்தை ஆர்வமுடன் வரவேற்று ஜெருசலேமில் உள்ள பிரதம முஸ்லிம் சபையார் அழைப்புக் கடிதங்கள் அனுப்பியிருந்தனர். மௌலானா மர்ஹூம் அவர்களது உடலைத் தாங்கிய நீராவிக் கப்பல் 'நார்குண்டா' 'போர்ட் ஸெய்ட்' என்னும் துறைமுகம் அணுகியதும், எகிப்திய அரசாங்கத்தார் இதனைத் தம் பொறுப்பில் வரவேற்று, போலீஸ் உடற் காப்புப் படையோடு அப்பாஸ் மஸ்ஜிதுக்கு எடுத்துச் சென்றனர் இம் மஸ்ஜிதில் தொழுகை நடைபெற்றதும் 'புஆத்' அரசரின் பிரதிநிதி, பிரதம மந்திரி, பிரதம கமிஷனர், கெய்ரோவில் உள்ள ஷைகுகள் பலர் பின் தொடர்ந்து வர, 'ஸந்தூக்' அப்பட்டினத்தின் முக்கிய தெருக்கள்' தோறும் எடுத் துச் செல்லப்பெற்றது 22-ந் தேதியன்று அப் பட்டினத்தை விட்டு மர்ஹூம் மௌலாஞ அவர்களின் ஸந்தூக்கை பாலஸ்தீன் நாடு நோக்கி இருப்புப்பாதை வழியாக எடுத்துச் சென்றனர். கெய்ரோ இளவரசர் மர்ஹூம் அவர்களின் ஸந்தூக்கிற்குப் போர்த்துவதற்காக ஒரு போர்வையும், அடக்கஞ் செய்யும் சமயம் ஆற்றுவதற்கு ஒரு பிரசங்கமும் அனுப்பியிருந்தார். அராபியர்களும் கிறிஸ்துவர்களும் திரள் திரளாக அடக்க வைபவத்தைக் காண ஜெருசலேம்

நகரத்தில் குழுமி யிருந்தனர் பார்க்கக் கண்கள்கவரத் தக்கதோர் காட்சியாகவே அங்குத்தோன்றிற்று. விசேடப்போலீஸார் எங்கனும் எச்சரிக்கையுடன் காவல் புரிந்து வந்தனர். நகரத்தின் மேற்குப் பகுதியிலிருந்து ஸந்தூக்கைக் கிழக்குப்பகுதி எடுத்துச் செல்லும் வரையில் எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பெற்றிருந்தன. அடக்கம் செய்யும் ஸ்தலம் கத்தீப் குடும்பத்தாரின் சொந்த இடமாகும். அடக்கம் செய்த பின்னர் இதன் சமீபத்தில் ஞாபகச் சின்னமாக ஒரு பள்ளி அமைப்பதற்காக முன்னதாகவே முயற்சிக்கப் பெற்றிருந்தது. முஸ்லிம் அநாதைக் குழந்தைகள் மர்ஹூம் மௌலானா அவர்களின் ஞாபகார்த்தமாக ஒரு போர்வையைத் தாங்களாகவே நெய்து மௌலானா ஷௌகத் அலீ அவர்களுக்கு அதனைப் பரிசளித்திருப்பதிலிருந்து முஸ்லிம் குழந்தைகள் எப்பகுதியில் இருப்பினும் அவர்கள் உள்ளத்தையும் நம் மாண்பு மிக்க அலீ சகோதரர்கள் கவிர்ந்திருக்கின்றனர் என்பது நன்குவிளங்காமற் போகா.

ஜனாசா ஜெருசலம் நகரை அணுகியதும் மௌலானா ஷௌகத் அலீ, ஜெருசலம் பிரதம முப்த்தியார் முதலானவர்கள் முன்னே செல்ல, எண்ணிறந்த ஜனக்கோடிகள் பின் தொடர, எல்லோருடைய முகத்திலும் ஆழ்ந்தத் துக்கக் குறி தோற்ற, ஊர்வலமாக உமர் பள்ளிவாசலை நோக்கி எடுத்துச் செல்லப்பெற்றது. ஆங்கு குழுமியிருந்த தலைவர்கள் பலரும் தங்களின் அநுதாபங்களைத் தெரிவித்தவண்ணம், மிகவும் சிறப்பாக அடக்கம் புரியப்பெற்றது. அதுகாலை பொதுவுடைமைக் கட்சியார் பல இடைஞ்சல் விளைக்கக் கருதியதாகவும், உடனே நமது பெருமை பொருந்திய அரசாங்கத்தார் அவர்களிற் பலரைக் கைது செய்துவிட்டதாகவும் கூறப்படுகின்றது. எல்லாம்வல்ல இறைவன்நம்அருமை 'மௌலானா' அவர்களுக்கு தனது சொந்த "ரஹ்மத்தை" வருஷிக்கச் செய்தருள்வானாக!

---

# பெண்களுக்கு சுதந்தரமளித்தல்

மௌலவீ A. K. அப்துல்ஹமீது சாஹிப் (பாக்கவீ) வரைவது

## ஹிந்துப்பெண்களின் நிலைமை

இந்தியாவிலுள்ள ஜனங்களில் ஹிந்துக்கள் சற்றேறக்குறைய 24 கோடி தொகையினராவர். அவ்வாராயின் ஹிந்துப் பெண்களின் தொகை சற்றேறக்குறைய பன்னிருகோடி எனக் கொள்ளலாம். "ஹிந்துக்கள் தங்களுடைய பெண்களுக்கும் ஆத்மா உண்டு. அவர்கள் செய்யும் நன்மை தீமைகளின் பலனும் அவர்களுக்குண்டு என்றே கூறுகின்றனர். எனினும் ஹிந்துக்களிலுள்ள இப் பன்னிருகோடி பெண்களுக்கும் இவ்வுலக வாழ்க்கையில் சுதந்தர மில்லை. ஏனெனில், எந்த ஹிந்துப் பெண்ணும் அவள் பிறந்ததிலிருந்து விவாகமாகும்வரை தன் பெற்றோரிடம் அடிமை போலவே வாழவேண்டும். ஆண்களுக்கு இன்ப மளிக்கக்கூடிய ஆடல் பா[illegible]ல்களைத் தவிர, அறிவை விருத்தி செய்யக்கூடிய எக்கல்வியும் கற்கக் கூடாது. அதி[illegible]லும் தங்களுடைய வேதத்தை நெருங்கவும் கூடாது, அதிலுள்ள யாதொரு சுலோகத்தை உச்சரிக்கவுங் கூடாது. பெற்றோர் தங்களு[illegible]கிஷ்டமான எவனுக்கும் அவளை விவாகஞ் செய்து விடலாம். அவனையே இவளும் கண[illegible]னாகக் கொள்ளவேண்டும். இவளுக்கு கண[illegible]னாக வரும் அவன் எவ்வளவு துர்க்குண[illegible] படைத்தவனாயினும் கொடிய நோயிற்சிக்[illegible] மரணத் தருவாயிலிருப்பவனாயினும், முதி[illegible]ந்த வயதுடைய தள்ளாடுங் கிழவனாயினு[illegible] 'அவனைக் கணவனாகக் கொள்ளேன்[illegible]' என்று மறுக்க இவளுக்கெவ்வித உரிமை[illegible]மில்லை. இவ்வாறு கணவனிடம் ஒப்படை[illegible]கப் பெற்ற அப்பெண் பெற்றோருடை[illegible] ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு தன் கண[illegible]னுக்கு அடிமையாகி விடுகின்றாள். தன் க[illegible]வனின் முதுமையைப் பற்றியோ, அவன[illegible] துர்க்குணத்தைப் பற்றியோ இவளுக்கெவ்வளவு வெறுப்பேற்படினும் அவனது விவாகப் பந்தத்திலிருந்து நீங்க இவளுக்கு வகையில்லை.



தவிர, அக்கணவன் இவளை எவ்வளவு துன்புறுத்தி சித்திரவதை செய்தபோதிலும் இவள் தற்கொலைபுரிந்து கொள்வதைத்தவிர அவனுடைய விவாக பந்தத்திலிருந்து விடுதலையடைய இவளுக்கு எவ்வித வழியுமில்லை.

இத்தகைய கணவன் மரித்தபின்னரேனும் இவளுக்கு விடுதலையுண்டா? அதுவுமில்லை. இவள் எவ்வண்ண வாலிபப் பெண்ணாயினும், மறு விவாகஞ் செய்துகொள்ள இவளுக்குரிமையில்லை. அக்கணவனின் புத்திரர்களிடமோ அல்லது அவனுடைய பந்துக்களிடமோ அடிமைபோலிருந்தே இவளுடைய காலம் முடிவுபெறவேண்டும். தங்கள் சுதந்தரத்தை இவ்வாறு முற்றிலும் இழந்து காலங்கழிக்கும் துர்ப்பாக்கியமான இந்த ஹிந்துப்பெண்களுக்கு தங்கள் தகப்பனுடைய சொத்திலோ, கணவனுடைய சொத்திலோ யாதொரு பாகமுண்டா? அதுவுமில்லை.

ஆகவே இத்தகைய கொடிய சட்டங்களுக்குட்பட்டு தவிக்கும் துர்ப்பாக்கியமுடைய ஹிந்துப்பெண்களில் எவர்கள் தங்களுடைய கஷ்டத்திலுருந்து விடுதலையடையக் கருதுகின்றார்களோ அவர்களுக்கு தற்கொலை புரிந்துகொள்வதைத்தவிர வேறு வழி இல்லை. ஆதலாற்றான் அநேகப் பெண்மணிகள் இறந்துபோன தங்கள் கணவன்மார்களுடன் உடன்கட்டையேறி மாண்டுகொண்டிருந்தனர்.

உடன்கட்டையேறும் அப் பெண்மணிகள் ஜீவித்திருந்தால் அவர்களுடைய பிற்கால வாழ்க்கையில் அவர்களுக்கு ஏற்படக்கூடிய கஷ்டநஷ்டங்களை நிவர்த்திக்க ஹிந்துமதம் எவ்விதத்திலும் இடமளிக்கவில்லை. ஆதலாற்றான், அப்பெண்களைச்சார்ந்த பெற்றோர் முதலியவர்கள் ஜீவனோடிருந்த அவர்களை எரித்துச்சாம்பலாக்கி விட்டு, தாங்கள் ஏதோ பெரிய புண்ணிய கைங்கரியஞ் செய்துவிட்டதாக எண்ணிக்கொள்வார்கள். உடன்கட்டை ஏறும் பெண்கள், நெருப்பின் அனல் தாவியவுடன் எழுந்து வெளியில் [illegible]ண்டு. அவ்வாறவர்கள் ஓடித் தப்பித்துக் கொள்ளாதிருக்கும் பொருட்டு பெரிய பெரிய விறகுக் கட்டைகளை அடுக்கி இவைகளின்மீது அப்பெண்களை இருத்தி, அவர்களுடைய கை, கால் முதலியவைகளை அக்கட்டைகளுடன் சேர்த்து பலமாகக் கட்டியேதான் அவர்கள்மீது நெய், எண்ணெய் முதலியவைகளையும் ஊற்றி அக்கட்டைகளுக்கு நெருப்பு மூட்டுவார்கள்.

மேலும், எரியும் அப்பெண்களின் அபயசப்தம் எவருடைய காதிலும் விழாதிருக்கும்பொருட்டு மேளவாத்தியங்களை மிக்க பலமாகவும் கோஷிப்பார்கள். இவ்வாறு தாங்கள் செய்தது ஞாயந்தான் ஏனென்றால், "கணவன், மனைவி இருவரின் ஜடலம் வெவ்வேறாக இருந்தபோதிலும் ஆவி ஒன்றே. ஒருவர் இறந்து மற்றவர் இவ்வுலகில் வாழ்வதில் இன்பமில்லை எனக்கருதியே பெண்கள் உடன்கட்டை ஏறி மாண்டனர்" என்று சில ஹிந்து நண்பர்கள் சமாதானங்கூறுவதுண்டு. அவ்வாராயின், இந்த ஹிந்துக்களில் எத்தனை பேர்கள் இறந்துபோன தங்கள் தம்மனைவிகளுடன் உடன்கட்டையேறி மாண்டிருக்கின்றனர்?

ஆகவே, உடன்கட்டை ஏறி மாண்டுகொண்டிருந்த பெண்களைவிட, அவர்களுடைய கை, கால்முதலியவைகளை விறகுக்கட்டைகளுடன் சேர்த்துக்கட்டி அவர்கள்மீது நெய், எண்ணை முதலியவைகளையும் ஊற்றி உயிரோடிருந்த அவர்களை எரித்துச் சாம்பலாக்கிக்கொண்டிருந்த ஹிந்துக்களின் மனோபான்மைதான் கவனிக்கத்தக்கது.

ஹிந்து மதத்தின் ஜீவகாருண்யமற்ற தன்மைக்கு அநேக உதாரணங்களிருக்கின்றன. சமணர்களின் சரித்திரமும் ஒரு உதாரணம், இந்தியாவிலிருந்த புத்தர்களின் சரித்திரமும் ஒரு உதாரணம். பஞ்சமரின் பரிதாபகரமான நிலைமையும் ஒரு உதாரணம். எனினும், இவைகள் யாவையும்விட தங்கள் பெண்களை உடன்கட்டை ஏறும்படி செய்து அவர்களின் மீது நெய், எண்ணெய் முதலியவைகளை ஊற்றி எரித்துக்கொண்டிருந்ததுவே சிறந்த உதாரணமாகும். ஏனென்றால், மற்றைய உதாரணங்களிளெல்லாம், இந்த ஹிந்துக்களுக்கும், சமணர், புத்தர் முதலியவர்களுக்கும் பூர்வ காலத்திலேற்பட்டிருந்த மாச்சரியந்தான் இந்த ஹிந்துக்கள் அவர்களை ஒரு சிறிதும் ஜீவகாருண்யமற்ற விதத்தில் துன்

புறுத்தி சித்திரவதை செய்யும்படி தூண்டிற்று என்று கூறுவதற்கிடமுண்டு. எனினும், தங்கள் பெண்களையே உடன்கட்டை ஏறும்படி செய்து ஜீவனோடிருந்த அவர்களை இவ்வாறு எரித்து சாம்பலாக்கிக்கொண்டிருந்ததன் காரணமென்ன? அவர்கள் இவர்களுடைய புத்திரிகளாகவோ, சகோதரிகளாகவோ, தாய்மார்களாகவோ தானிருந்தார்கள்.

இவ்வாறெல்லாம் செய்துகொண்டிருந்த நம் ஹிந்து நண்பர்களிற் சிலர் தங்களுடைய மதத்திற்கு நிகரான ஜீவகாருண்யமுள்ள மதம் இவ்வுலகில் வேறொன்றுமில்லை என்று கூறுவதுடன், இஸ்லாம், வாளின் பலத்தைக் கொண்டே இவ்வுலகில் பரவியதென்றுங் கூறுகின்றனர்.

இந்தியாவில் இஸ்லாமிய ஆட்சி எடுபட்டு 150 வருஷங்களுக்கு மேலாகின்றது. அவர்களுடைய ஆட்சி எடுபட்டபொழுதே அவர்களுடைய வாள் பலமும் போய்விட்டது. தற்காலம் அவர்களிடமிருப்பதெல்லாம், மெய்யான சகோதரத்துவம், சமத்துவம், ஜாதி பேதமற்ற நீதி, நியாயம் முதலியவைகள் தான். இத்தகைய நிலைமையில் இந்த பத்து வருஷங்களுக்குள்ளாகவே சற்றேறக்குறைய ஒரு கோடி இருபது லக்ஷம் ஹிந்துக்கள் இஸ்லாத்தை தழுவி யிருக்கின்றனர். ஆகவே, இஸ்லாத்தைத் தழுவும்படி இந்த ஒரு கோடி இருபது லக்ஷம் ஹிந்துக்களையும் நிர்ப்பந்தித்தது, இஸ்லாத்தின் வாளா? அல்லது அவர்கள் பின்பற்றியிருந்த இந்த ஹிந்து மதத்தின் ஜீவகாருண்யமற்ற கொடிய சட்டதிட்டங்களா? என்பதை நேயர்களே கவனிக்கவும். தவிர, ஹிந்துக்களிலுள்ள பெரிய பெரிய கல்விமான்களும், அறிவாளிகளும், மேதாவிகளும் பின்பற்றவேண்டுமென்று தற்காலம் கூறுகின்ற சீர்திருத்தங்கள் யாவும், இஸ்லாமிய சட்டதிட்டங்களா? அல்லது ஹிந்து மத சட்டங்களா? இவ்வாறு இந்த மேதாவிகள் 'தங்கள் ஹிந்து மத சட்டதிட்டங்களை புறக்கணித்துவிட்டு இஸ்லாமிய சட்ட திட்டங்களையே பின்பற்றும்படி அவர்களை நிர்ப்பந்திப்பதும் இஸ்லாமிய வாளாயுதந்தானா?

இந்த ஹிந்து மேதாவிகள் இன்றையத்தினம் விரும்புகின்ற இச்சீர்திருத்தங்களை அவர்கள் அடைந்து விட்டபோதிலும் அவைகளைக் கொண்டும் அவர்கள் திருப்தி அடைந்துவிட முடியாது. பின்னும், வேறு பல சீர்திருத்தங்களையும் அவர்கள் கோரவேண்டியதே யிருக்கின்றது.

இவ்வாறு பல சீர்திருத்தங்களை படிப்படியாகப் பின்பற்றி இவர்கள் என்றையத்தினம் முற்றிலும் திருந்துகின்றார்களோ அன்றையத்தினம், அவர்கள் தங்களை முஸ்லிம்களெனப் பெயர் கூறிக்கொள்ளாவிடினும் இஸ்லாமிய சட்ட திட்டங்களையே முற்றிலும் பின்பற்றி நடப்பவர்களாகக் காணலாம். ஆகவே, இவ்வாறு ஹிந்துக்களில் உள்ள பெரிய பெரிய மேதாவிகளையும் இஸ்லாமிய சட்டங்களைப் பின்பற்றி நடக்கும்படி நிர்ப்பந்திப்பது இஸ்லாமிய வாளல்ல. அவ்வாறு நிர்ப்பந்திப்பதெல்லாம் அறிவுக்கும் ஆராய்ச்சிக்கும் ஒரு சிறிதும் பொருந்தாததும் இயற்கைக்கு முற்றிலும் மாறுனதும், மனிதனை மனிதன் சித்திரவதை செய்யும்படித் தூண்டக்கூடியதுமான ஹிந்து மதத்தின் கொடிய சட்டதிட்டங்கள்தான் என்பதை தெளிவாகவே அறிந்துகொள்ளலாம். இதனை இம்மட்டில் நிறுத்திக்கொண்டு ஹிந்துப் பெண்கள் உடன்கட்டை ஏறிக்கொண்டிருந்த விஷயத்தை பின்னும் சிறிது கவனிப்போம். ஹிந்துப்பெண்கள் உடன்கட்டை ஏறி மாண்டுகொண்டிருந்ததை அரசாங்கத்தார் 1829-ம் வருஷத்தில்தான் தடைசெய்து விட்டனர். அவ்வாறு அதனை தடைசெய்தும் விதவாவிவாகம் ஹிந்துக்களிலில்லாததுடன் பொருள்களிலும் விதவைகளுக்குப் பாகம் கிடைக்காததனால், யாதொரு நன்மையுமேற் படவில்லை.

ஆதலால் ஹிந்து விதவைகள் பின்னும் தங்களுடைய ஜீவியகாலம் வரையில் பலவாறுன துன்பங்களுக்குள்ளாக வேண்டியதா வே யிருக்கின்றது. அத்துன்பங்களின் காரணமாக தற்காலத்திலும் அநேக விதவைகள் பலவாறுக தற்கொலை புரிந்து கொண்டுதான் வருகின்றனர். ஆகவே, இவ்வாறு தற்கொ புரிந்துகொள்ளும்படி ஹிந்துப் பெண்க நிர்ப்பந்தித்துவந்த அவர்களுடைய கஷ்ட கள் யாவையும் நிவர்த்தித்து, "இவ்வுல வாழ்க்கையில் ஆண்களுக்கு என்னென்ன சுதந்தரங்களிருக்கின்றனவோ, அச் சுதந் ரங்கள் யாவும் உங்களுக்குமிருக்கின்றன அவைகளை நீங்களும் உங்களுடைய இயற்கை அமைப்புக்குத் தக்கவாறு பூரணமாக அனுபவிக்கலாம்."

"உங்களுடைய அறிவை விருத்தி செய்யக்கூடிய கல்வியை போதிப்பது உங்கள் பெற்றோர்மீதும், அதனைக் கற்றுக்கொள்வது உங்கள்மீதும் கடமையாகும்." "நீங்கள் விரும்பாத எவனையும் நீங்கள் கணவனுகக்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் கிடையாது." "உங்கள் பெற்றோரே, நீங்கள் விரும்பாத எவனையும் உங்களுக்கு கணவனுக்கியபோதிலும் அதனை மறுக்க உங்களுக்கு சுதந்தரமுண்டு." "உங்களை கண்ணியமாக நடத்தாத கணவனின் விவாக பந்தத்திலிருந்து நீங்கி, நீங்கள் விரும்புங் கணவனை விவாகஞ் செய்துகொள்ளலாம்."

"மனைவியை இழந்த கணவன் மறு விவாகஞ் செய்து கொள்வதைப்போல், கணவனை இழக்கும் நீங்களும் மறு விவாகஞ் செய்து கொள்ளலாம். உங்கள் தகப்பனுடைய சொத்திலும் உங்களுக்கு பாகமுண்டு. உங்கள் தாயினுடைய சொத்திலும் உங்களுக்கு பாகமுண்டு' உங்கள் கணவனின் சொத்திலும் உங்களுக்கு பாகமுண்டு. உங்கள் புத்திரனுடைய சொத்திலும் உங்களுக்கு பாகமுண்டு' உங்கள் சகோதரனுடைய சொத்திலும் உங்களுக்கு பாகமுண்டு. உங்கள் சகோதரியுடையசொத்திலும் உங்களுக்கு பாகமுண்டு. உங்களுடைய பந்துக்களில் இன்னும் பலருடையசொத்திலும் உங்களுக்கு பாகமுண்டு."

என்ற சட்டங்களை இயற்றி அமலில் கொண்டுவரும் பட்சத்தில், துர்ப்பாக்கியமான இந்நிலைமையிலுள்ள கோடிக்கணக்கான ஹிந்துப்பெண்களும், அந்நாளை எவ்வாறு கொண்டாட வேண்டும்? மிக்கக் கேவலமான நிலைமையில் ஹிந்துப் பெண்கள் ஆழ்ந்துகிடந்த ஆயிரக் கணக்கான வருடங்களைவிட அச் சட்டமியற்றப்பெற்று அமலில் வந்த நாளை மேலென்றே கொண்டாடுவார்களென்பதில் என்ன சந்தேகம்?

முஸ்லிம் பெண்களின் நிலைமையும் இஸ்லாத்திற்கு முன்னர், இந்த ஹிந்துப் பெண்களின் நிலைமையைவிட மிக்க இழிவானதாகவே இருந்தது. அவ்வாறு இழிவான நிலைமையிலிருந்த அப்பெண்களை விடுதலை செய்து, மேற்கூறிய சுதந்தரங்கள் யாவையும் பூரணமாக அவர்களுக்கு அளித்தது திருக் குர்ஆன் என்னும் வேதந்தான். ஆகவே, இவ்வளவு மேலான பரிசுத்த வேதத்தை இவ்வுலகத்தில் இறைவன் அருள்செய்த லைலத்துல்-கத்ரி என்னும் இரவை ஆயிரம் மாதங்களைவிட மேல் என்று அவன் கூறியது மிகைப்படக் கூறியதாகுமா? ஆயிரம் மாதங்களென்ன? ஆயிரம் வருடங்களை விட மேலென்று கூறினும் அது மிகைப்படக் கூறியதாகாது.

திருக் குர்ஆன் என்னும் பரிசுத்த வேதம் பெண்களுக்கு அளித்திருக்கும் இச்சுதந்தரங்களில் எதையேனும் ஹிந்து மதம் தன்னைப் பின்பற்றும் பெண்களுக்கு அளித்திருக்கின்றதா? அது இல்லை என்றே மறுத்து விட்டது. ஆகவே, ஹிந்துப் பெண்கள், தங்களுடைய துர்பாக்கியமான இந்நிலைமையிலிருந்து விடுதலை அடைய எவ்வித மார்க்கமுமில்லைஎன்று இதுவரையில் எண்ணிக்கொண்டிருந்ததனுல் தங்களுடைய இக்கஷ்டங்களை நீக்கிக்கொள்ள அவர்கள் எவ்வித முயற்சியும் செய்யா திருந்துவிட்டனர். எனினும், கல்வி அறிவு அபரிமிதமாக அபிவிருத்தியாகிவரும் இக்காலத்திலோ ஹிந்துக்களிலுள்ள பெண்கள் யாவரு மில்லாவிடினும், அவர்களில் எவர்கள் இயற்கைப் பொருளாராய்ச்சிக் கல்வியின் வாடையை சிறிதேனும் நுகர்ந்து, தங்கள் சமீபமாக வசிக்கும் முஸ்லிம் பெண்கள் இச் சுதந்தரங்களை தாராளமாக அனுபவித்து வருவதையுங் கவனித்தார்களோ அவர்கள், தங்களுடைய துர்ப்பாக்கியமான இந்நிலைமைக்கு, இயற்கைக்கு மாறுன தங்கள் மதச் சட்டங்களும், அவைகளை நீக்க தங்களுடைய முயற்சியின்மையுமே காரணமென்பதை யுணர்ந்துகொண்டு தற்காலம் அவர்கள் கூறுவதாவது:—

"எங்களுடைய இயற்கை பாத்தியங்களை யாங்கள் அடைந்தே தீருவோம்; அதனைத் தடை செய்யும் எதனையும் யாங்கள் பொருட்படுத்தோம்.' 'எங்களுடைய அறிவை விருத்தி செய்யக்கூடிய கல்வி எங்களுக்கும்வேண்டும்.' நாங்கள் வெறுப்போரை கணவனுகக் கொள்ளும்படி எங்களை எவரும் நிர்ப்பந்திக்கப்படாது.' 'எங்களை கண்ணியமாக மதித்து நடத்தாத கணவனின் விவாக பந்தத்திலிருந்து நீங்கி, யாங்கள் விரும்பும் கணவனை விவாகஞ் செய்து கொள்ளுவோம். மனைவியை இழந்த கணவன் மறுவிவாகஞ் செய்து

கொள்வதைப்போல் கணவனை இழக்கும்
யாங்களும் மறு விவாகஞ் செய்து கொள்ளு
வோம்.' 'எங்கள் தகப்பனுடைய பொரு
ளில் எங்களுக்கு பாகம் வேண்டும்.' 'எங்கள்
கணவனுடைய பொருளிலும், எங்களுக்கு
பாகம் வேண்டும்' என்று இவ்வாறே இன்
னும் பல சுதந்தரங்களையும் கோருகின்றனர்.
தற்காலம், ஹிந்துப் பெண்கள் கோருகின்ற
இச் சுதந்தரங்கள் யாவையும் இவர்கள்
கோருவதைவிட மிக்க மேலானவிதத்தில்
திருக் குர்ஆன் என்னும் பரிசுத்த வேதம்
1350 வருஷங்களுக்கு முன்னதாகவே பெண்
களுக் களித்திருக்கின்றது. எனினும் இந்த
ஹிந்துப் பெண்கள் அதனை உணர்ந்துகொள்
வதற்குத் தான் இவ்வளவுகாலஞ் சென்றது.

இவ்வளவு காலத்திற்குப் பின்னரும் இந்த
ஹிந்துப் பெண்கள் திருக் குர்ஆன் என்னும்
வேதம், என்னென்ன சுதந்தரங்களை பெண்
களுக்கு அளித்திருக்கின்ற தென்பதையும்,
அவைகளை, அவர்கள் அடைவதற்கு எவ்
வளவு சிறந்த முறைகளை அறிவித்திருக்கின்ற
தென்பதையும் உணர்ந்து கொண்டதாகவுந்
தெரியவில்லை. ஏனென்றால், தற்காலம் ஹிந்
துப் பெண்கள் கோருகின்ற சுதந்தரங்களை
யும் அவைகளை அடைவதற்கு அவர்கள் கை
கொள்ள விருக்கும் முறைகளையும் கவனித்
தால், அவைகளில் பலகுறைகளிருப்பதுடன்
அச் சுதந்தரங்களை அவர்க ளடைவதில் பல
தடை களிருப்பதையுங் காணலாம். ஆகவே,
அத்தடைகள் எவை யென்பதை முதலாவ
தாகக் கூறிவிட்டு, அவர்கள் கோருங்
கோரிக்கைகளிலுள்ள குறைகளைப் பின்னர்
கூறுவோம்.

### ஹிந்துப் பெண்களின் விடுதலைக்குள்ள இடையூறுகள்.

தற்காலம் ஹிந்துப்பெண்கள் கோரும்
சுதந்தரங்களில் பெரும்பாலானவை அவர்க
ளுடைய ஆண்களுக்குஞ் சம்பந்தப்பட்டவை
களாகவே இருக்கின்றன. ஆகவே, அவர்க
ளுடைய ஆண்கள் சம்மதித்தாலன்றி அவை
களை அவர்க ளடைகிறதற்கில்லை. தற்காலம்,
ஹிந்துக்களில் பல சீர்திருத்தக்காரர்கள் இச்
சுதந்தரங்களை ஹிந்துப் பெண்களுக் களிக்க
விரும்புகின்றார்க ளென்பதிலையமில்லை. எனி
னும், இவ்வாறு விரும்புகின்றவர்களின்
தொகை இதற் கெதிரிடையா யிருப்ப
வர்களின் தொகையில் இலக்ஷத்தி லொரு
பாகமென்றுங் கூறுவதற் கில்லை. இச்
சொற்ப தொகையினர் தங்களுடைய
அரும் பெரும் முயற்சியைக்கொண்டு தங்
களுக் கெதிரிடையா யிருக்கும் பெருந்
தொகையினரை சம்மதிக்கும்படி செய்து
விட்டபோதிலும், அதனை அவர்கள் பின்பற்
றும் ஹிந்து மதம் சம்மதிக்காது. ஏனென்
றால், ஹிந்து மதம், தன்னை பின்பற்றும் எவ
ரும் அச்சுதந்திரங்களில் எதையும் தங்கள்
பெண்களுக்கு அளிக்கப்படாதென்றே கூறு
கின்றது. இவ்வாறு தங்களுடைய மதம்
தடை செய்வதையும், பொருட்படுத்தாது
நம் ஹிந்து நண்பர்கள் அச்சுதந்தரங்களை
தங்களுடைய பெண்களுக்கும் அளித்துவிட்ட
போதிலும் அதனை அரசாங்கமும் அங்கீகரிக்
காத வரையில், யாதொரு பயனுமில்லை.
ஏனென்றால், சொத்துக்களில் பாகம் அடை
வது, விவாகப் பிரிவினை ஆவது போன்ற
சுதந்தரங்களை பெண்கள், அரசாங்க உதவி
யன்றி பூரணமாக அனுபவிக்க முடியாது.
ஆதலால்தான் இச்சுதந்தரங்களைத் தங்கள்
பெண்களுக் களிக்கவிரும்பும் ஹிந்து சீர்
திருத்தக்காரர்கள் அவைகளை அரசாங்கமும்
அங்கீகரிக்கும்படி செய்ய பெரும் முயற்சியும்
கிளர்ச்சியுஞ் செய்துவருகின்றனர்.

எனினும், நம் ஹிந்து நண்பர்கள் தங்களு
டைய பெண்களுக்கு அளிக்க விரும்புகின்
இச்சுதந்தரங்களில் எவ்வளவை அரசாங்கம்
இதுவரையில் அங்கீகரித்துக் கொண்டிருக்
கின்றது? அவைகளில் இரண்டொன்றை
அங்கீகரிக்கவே, எத்தனையோ இடங்களில்
எத்தனையோ மகாநாடுகள் கூட்டி, எத்த
னையோ தீர்மானங்களை நிறைவேற்றி, எவ்வ
ளவோ காலம் வரையில் பிரையாசைப்பட்டு
இவர்கள் அரசாங்கத்தோடும் போராடவேண்
டியதாயிற்று. ஆகவே, இவர்கள் அளிக்க
விரும்பும் மற்றைய சுதந்தரங்களையும் அர
சாங்கம் அங்கீகரித்துக்கொள்ளும்படி செய்ய
எவ்வளவுகாலஞ் செல்லுமோ! இவர்கள் என்
னென்ன செய்யவேண்டிய திருக்குமோ!
இவ்வளவு கஷ்டங்களுக்கெல்லாம் காரணம்
என்ன? ஹிந்துமதம் அச்சுதந்தரங்கள் பெண்
களுக்கில்லையென்று மறுப்பதும், அவர்கள் தங்
களை ஹிந்துக்களென்று கூறுவதுமேயாகும்.

## ஆசிரியர் குறிப்புகள்

சிறப்புற்ற ரமலான் :—சீரும் சிறப்பும்
ஒருங்கே அமைந்து நிற்கும் ரமலான் மாதத்
தில் தங்கள்மீது நோன்பு கடமையாக்கப்
பெற்ற அனைவரும் நோன்பு நோற்று அவ
ன்அருட் காள்ளாவார்கள் என்று நாம் எதிர்
பார்க்கின்றோம். இஃது இறைவனின் திருக்
கட்டளையுமாகும். நோன்பின் உயர்வையும்,
அதனால் ஏற்படக்கூடிய பலன்களையும் அது
நம்மீது கடமையாக்கப்பெற்ற விதங்களையும்
அது அனுஷ்டிக்கப்பட வேண்டிய முறைகளை
யும் சென்ற மாத இதழில் விவரமாக நாம்
கூறியுள்ளோம் அவைகளை நன்குணர்ந்து
நோன்பு நோற்று வருவதால் ஆத்மப் பிணி
அகன்றொழிந்து ஆத்ம சுத்தி உண்டாகின்
றது. இதனால் நன்மையில் உணர்ச்சியும்,
தன்மையில் உறுதியும், அருளாளன்பால்
அன்பும் நோன்பு நோற்று வருவோர் மனத்
தில் எழுகின்றன. இதனை நமது ரசூல் (ஸல்.)
அவர்களின் திருமொழி வலியுறுத்திக் கூறு
வதைக் காண்க : " தீமையினின்றும் விலகிக்
கொள்வதற்காக கண்காணிப்போடு ரமலான்
மாதத்தில் நோன்பு கொண்ட ஒருவனு
டைய முந்திய பாபங்கள் எல்லாவற்றையும்
அல்லாஹு தஆலா மன்னித்து விடுகின்
றான்." இதனினும் இம் மாதத்திற்கும், இம்
மாதத்தில் நோற்கும் நோன்பிற்கும் வேறு
சிறப்பு யாண்டுளது? முந்திய பாபங்கள்
இறைவனால் மன்னிக்கப்பெற்றன என்ற
தப்பாதே நோன்பு நோற்ற மனிதன் அன்று
முதல் புதிய, தூய்மையான நிலைமையைப்
அடைத்த ஒரு மனிதனாகின்றான் என்பது
பொருந்தவில்லையோ? எனவே, சீர்திருத்தக்
காரர்கள் பலர் பிதற்றுவது கேட்டு, நம் மக்
கள் நோன்பு நோற்கும் பெரும் பாக்கியத்
தைத் தவறவிட்டு அதனால் இறைவனின்
கடிய தண்டனைக் குள்ளாய் வருத்தம்
அடையாமல், இச்சிறப்புத் தங்கிய சங்கை
பொருந்திய ரமலான் மாதத்தில் நோன்பு
நோற்று எல்லா நலன்களையும் பெற்றுய்யு
மாறு வற்புறுத்திக் கேட்டுக் கொள்ளுகின்
றோம்.

இரங்கூன் சோலியா முஸ்லிம் அசோஸியே
ஷன் :— பர்மாவில் ஆயிரக் கணக்காய்
வதிந்துவரும் சோலியா முஸ்லிம்கட்கிடை
யில் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஒரு உண்மை
ஸ்தாபனம் இருத்தல் இன்றியமையாதாத
லால், தலைப்பிற்கண்ட பெயரமைந்த ஒரு
ஸ்தாபனம் 19 ஆண்டுகளாக நஞ் சமுகத்தின்
கல்வி, மார்க்க, அரசியல், தொழில், வர்த்தக
ஞானங்களை அபிவிருத்தி செய்துவருகின்
றமை மிகவும் பாராட்டத் தக்கதாகும். இச்
சங்கத் தலைவராகவும், ஜீவிய அக்கிராசனாதி
பதியாகவும் ஜனாப் V. M. அப்துர் ரஹ்மான்
அம்பலம் அவர்கள் அமர்ந்து உழைத்து வரு
கின்றமை குறிப்பிடத் தக்கது. பொருள்
நலனும் உடல் நலனும் ஆற்றல் நலனும்
ஒருங்கேபடைத்த கனம் அம்பலம் அவர்கள்
இச் சோலிய சமுகத்தை முன்னணியில்
கொண்டுவரத் தம் ஓய்வுக்காலம், பொருள்,
சுகம் முதலியவைகளைப் பாராட்டாது சற்
கருமமே கண்ணாகி நிற்பதை என்னென்பேம்.
இவர்கள் புகழ் இவ்வுலகம் பரவுவதாக!

நிற்க, இச் சங்கத்தாரால் புத்தக-வாசக
சாலையும், சோலிய முஸ்லிம் என்னும் பத்திரி
கையும் இராப் பாடசாலையும் நிறுவப்பெற்று
சீரும் சிறப்புமாக நடைபெறுவது கண்டு
யாரே இன்பம் அடையார்? சங்கத்தாரால்
நம்மவர்க் கவசியமாயுள்ள எல்லா விஷயங்
களும், நிகழ்ச்சிகளும் அவ்வக் காலத்தே
முயற்சிக்கப்பெற்று வருவதும் போற்றற்
குரியதாகும். மார்க்க நலனைப் பற்றிய
அநேக விஷயங்களும் மேன்மை பொருந்திய
நமது நபிகள் (ஸல்.) திலகம் அவர்கள்
பிறந்தநாள் விழாவும் செய்யிதுனா ஷெய்கு
அப்துல் காதிர் ஜெய்லானி (ரலி.) அவர்க
ளது பிறப்புத்தினக் கொண்டாட்டமும்
இவை போன்ற பல நிகழ்ச்சிகளும் சமுகத்
தொடர்பாக பர்மிய—இந்திய கலகக் காலத்
தில் ஓயா உழைப்பும் துண்டுப் பிரசுர வழங்க
மும், பாதுகாப்பும்—இவை போன்ற பல
முறைகளும்; முன்னேற்றத்தின் தொடர்பாக
பல அறிஞர்களைக் கொண்ட சொற்பொழிவு

களும், பள்ளிக்கூடமும் பிறவும், இவர்களது முதிர்ந்த நிர்வாகத் திறமைக்கு நற்சான்றுகின்றன.

இச்சங்க முன்னணியில் நின்று இத்துணை ஊக்கத்துடன் உழைத்து வருவதற்கு இதன் நிர்வாக உத்தியோகஸ்தர்களுடையவும் தலைவர் V. M. அப்துர் ரஹ்மான் அம்பலம் அவர்களுடைய தம் குன்று முயற்சியின் பயனென்றே கருதுகின்றோம். இச் சங்கம் நீடூழி வாழி!

லண்டன் மகாநாடு முற்றிற்று :—லண்டன் மாநகரத்தில் கூடிய வட்டமேசை மகாநாடு ஒருவாறு முடிவுற்றது. இந்தியாவின் ஆட்சி முறைத் திட்டத்தை வகிப்பதற்கென்று பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்தியாவினின்றும் தம் நாட்டினின்றுந் திரட்டிய பிரதிநிதிகள் ஏகோபித்த எந்த முடிவிற்கும் கட்டுப்பெறுதவர்களாய் இருந்தமை இவ்வட்டமேசை மகாநாட்டின் விசேடங்களில் ஒன்றும். இந்தியப் பிரதிநிதிகள் இந்து—முஸ்லிம் பிரச்சினையைத் தமக்குள் ஒழுங்குபடுத்திக்கொண்டார்களல்லர். பொதுவாக எல்லோரும் தம்தம் (சிற்றரசர் உட்பட) அழுத்தமான தேசியப் பற்றை அங்கு அழகிய மொழிகளால் வலியுறுத்திக் கூறினர். இவர்கள் தேசபக்தி முழுமையும் சமூக சுயநலப் பிடிவாதத்தைக் கடந்ததன்று என்பதை நன்குணர்ந்த அரசியல் தந்திரவாதிகளான வெள்ளையர் நம்பிரதிநிதிகட்கிடையில் சமூகப் பிரச்சினையை நுழையச் செய்து வட்டமேசை மகாநாட்டு நிகழ்ச்சிகள் பெரும்பான்மையானவற்றை சமூகப் போராட்டத்தில் குழம்பவிட்டனர். இதற்குள்ளாக சப்கமிட்டிகள் என தனிப்பட்ட பல்வேறு பிரச்சினைகளை உண்டாக்கி அடிப்படை கோலியிருப்தாகத் தெரிவித்தனர். கூட்டுறவு ஆட்சிமுறை அமைக்கப்படும் என்றும், அதில் சிற்றரசர்கள் தங்கள் பிரியப்படி கலந்துகொள்ளலாம் என்றும், அவ்வாட்சி முறையில் தேசீயப் பாதுகாப்பு, பாதுகாப்பிற்கான பொருளாதாரப் பொறுப்பு, இன்னும் பல (சில?)பொருளாதாரப் பொறுப்புக்கள் மாற்றப்பெறுத (அஃதாவது இந்திய அரசாங்கத்தார் சொந்தப் பார்வையிலே உள்ள) விஷயங்களாக தற்காலிகமாக இருக்கும என்றும், மத்திய சட்ட சபையில் சட்டசபைக்கு அதிகாரம் கொடுக்கப்படுமென்றும், இதன் வரையறை பிற்காலத்தே தீர்மானிக்கப்படும்

என்றும், கவர்னர்கள் அரசப் பிரதிநிதி
இவர்கட்கு எப்பொழுதும்போல் சட்டசபை
முடிவுகளை ரத்து செய்யும் உரிமை (இந்தியா
வின் நன்மையைப்பற்றி) இருந்துவரும் என்
றும் முடிவு செய்யப் பெற்றுள்ளதாக பிரிட்
டிஷ் முதன் மந்திரியார் அழகாகப் பேசி நம்
பிரதிநிதிகளுக்கு பிரிவுபசாரம் செய்துள்
ளார். பிரிட்டிஷ் அரசாங்கத்தார் எத்தகைய
முடிவு செய்யினும் காங்கிரசாரின் ஒத்
துழைப்பின்றி இடைஞ்சலே உண்டாமென
வெண்ணி தாமே தமது பெருமையைவிட்டுக்
கொடுத்துக் கொள்ளாதவர்களாய், அரசப்
பிரதிநிதியைக்கொண்டு ஸ்ரீ காந்தி போன்ற
காங்கிரஸ் தலைவர்களைச் சிறையினின்றும்
விடுவிக்கச் செய்துள்ளார்கள். பிரிட்டிஷ்
முதன் மந்திரியின் வழவழப்பான பேச்சுக்
குக் காங்கிரஸ் எத்துணை யளவில் அருத்தப்
கண்டு பிடித்திருக்கின்றது என்பதை பிரிட்
டிஷ் அரசாங்கம் கவனித்த பின்னர்தான்
இந்திய ஆட்சி முறைத் திட்டம் ஒருவாறு
வரையிறுக்கப் பெறும் என்னும் நம்பிக்
கொள்ளப் போதிய ஆதாரங்கள் காண
கின்றன. எனவே வியாபாரிகளான வெள்
யர் அரசியல் திட்டத்தை வரையிறுக்க வி
பார நுட்பத்தோடு பின்வாங்கிக்கொ
டிருக்கின்றனர். எத்துணை அளவில் மத்தி
சட்ட சபையில் இந்தியர்கட்கு உரி
கொடுப்பது என்பதை, இந்தியர்கள்
பெரும்பான்மையோரின் ஆதரவின் உ
யைக் கொண்டு தீர்மானிக்குமாறு பிரி
ஷார் தயங்கிக்கொண் டிருக்கின்றனர். க
கிரசுக் கிளர்ச்சி முதலிய குழப்பங்கள்
தமக்கு ஏற்படக்கூடிய ஆதரவை உறுதி
வும் அவர்கள் தெரிந்துக்கொள்ள இய
வர்களாய் இருப்பதால், மகாநாட்டிற்
சென்றுள்ள சர் தேஜ் பகதூர் சாப்ரூ
லானவர்கள் இந்தியாவினின்றும் முதன்
திரிக்கு இனி தெரிவிக்கக்கூடிய அர
செய்திகளை பிரிட்டிஷ் பிரதம மந்திரி
பார்த்திருக்கின்றார். பிரிட்டிஷார் தம்
பான்வையை எளிதில் விளக்கிக் காண்
துக் கொள்ளுபவர்களல்லர். ஆதலால்
அரசியல் திட்டத்தைப்பற்றி, இங்கில
சென்ற இந்தியப்பிரதிநிதிகள் இந்தியா
தும் கூறுவதினின்றே ஒருவாறு நாம் அ
கூடும். அரசியல் திட்ட வியாபாரம் இன்
பேசித் தீரவேண்டிய அளவிற்றுன் உள்

